உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்



தருமையாதீனத் திங்கள் இதழ்



மலர் 42 / ருத்ரோத்காரி ஆண்டு வைகாசித்திங்கள் 10-6-83 / இதழ் 7

தருமையாதீன முதற்குரவர் குருபூஜை விழா

ஸ்ரீல ஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் கொலுவழிபாட்டில்



வழிபாடாற்றிய

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம். கயிலைமாமுனிவர்

ஸ்ரீமத். காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகளுக்குப் பொன்னுடை போர்த்தி ஆசியருளல்.

2 — 6 — 83

தருமையாதீனக் குருமுதல்வர்



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

உ

குருபாதம்

## ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள்வாக்கு

தண்டுவரும் குண்டுவரும்
தானைவரும் ஆனைவரும்
வண்டில்வரு மாடுவரு
மாடுவரும் — மிண்டிப்
பெருங்கோட்டை யுஞ்சுமையும்
பின்புவருங் கூடல்
அருங்கோட்டை வாசலிற்சென்
ருல்.

— சில பிரதிகளில்
காணப்படும் பாடல் 7

ஆசிரியர் :-
வித்துவான்
**இராமலிங்கத் தம்பிரான் சுவாமிகள்**

துணையாசிரியர் :-
மகாவித்துவான்
**சி. அருணைவடிவேல் முதலியார்**


உ

குருபாதம்

# " ஞானசம்பந்தம் "

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 42 | 10-6-83 | இதழ் 7


## உட்பொருள்






ஆண்டுச் சந்தா உள்நாடு ரூ. 12
ஆண்டுச் சந்தா சிலோன் ரூ. 23
ஆண்டுச்சந்தாவெளிநாடு ரூ. 25
ஆயுள் சந்தா உள்நாடு ரூ. 125
ஆயுள் சந்தா வெளிநாடு ரூ. 250

உ
குருபாதம்

# ஞானசம்பந்தம்

மலர் 42 || ருத்ரோத்காரி - வைகாசி - 10—6—83 || இதழ் 7

திருச்சிற்றம்பலம்

பொன்தயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்தயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியினுய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே.

— ஞானசம்பந்தர்,

திருச்சிற்றம்பலம்

# மரம் வளர்ப்போம்! மாண்புறுவோம்!

## என்றும் இன்பம் பெருக!

உலகில் உள்ள எல்லா மக்களும் தாம்இன்பமாக வாழ வேண்டும் என்று கருதுவது இயற்கையே. இன்பம் விழையாத வராக ஒருவரும் இரார். எல்லா மக்களும் இன்பமாக வாழ வேண்டும் என்றே அருளாளரும் விரும்பினர்; வேண்டினர்.

" எல்லாரும் இன்புற்று இருக்க நினைப்பதுவே அல்லாமல்
வேறுஒன்று அறியேன் பராபரமே "

என்ருர் தாயுமானவர். எவ்வகையில் வாழ்ந்தால் இன்ப வாழ்க்கை அமையும் என்பதைச் சிந்திக்கவேண்டும். எல்லா உயிர்களையும் தன்னுடைய உயிர்போலக் கருதி நேசித்து, அவ்வுயிர்களிடம் இரக்கம்காட்டும் பண்பு, இன்ப வாழ்விற்கு அடிப்படையானது. அத்தகைய உள்ளம் தெய்வ அருட் கருணையால் உண்டாகக்கூடியது. மரம் செடி, கொடிகள்,

பறப்பன, ஊர்வன, நீர்வாழ்வன முதலிய எல்லா உயிர்களிடத்தும் கருணை காட்டும் உயர்ந்த லட்சியத்தை அருளுமாறு தாயுமானவர் இறைவனை வேண்டுகிறார்.

" எவ்வுயிரும் என்னுயிர்போல் எண்ணி இரங்கவும்நின்
தெய்வ அருட்கருணை செய்யாய் பராபரமே "

என்பது அவர் வேண்டுகோள்.

**சுகாதாரம் வளர :**

தான் சுபிட்ச[illegible] வாழவேண்டும் என்றுகருதும் ஒவ்வொருவரும் தம்மைச் [illegible]ந்துள்ள சுற்றுப்புறச் சூழலைச் சுகாதாரம் உடையதாக வைத்துக்கொள்ள வேண்டும். ஒருநாட்டில் மூன்றில் ஒருபகுதி காடுகளாகஇருந்தால்தான் சுகாதாரம்மேலோங்கி இருக்கும். ஆனால் இன்றைய நிலையில் ஆறில் ஒருபங்குதான் காடுகளாக உள்ளன. இந்நிலை நம் சுகாதாரத்துக்குப் பெரிதும் கேடு விளைவிப்பதாகவே அமைந்துள்ளது.

சூழ்நிலைச் சுகாதாரத்தை வளர்ப்பதற்காகவே நம்முன்னோர் மரம்வளர்த்தல், குளம் தோண்டுதல் முதலிய அரிய பணிகளைச் சமய ஒழுக்கமாகவும், சமுதாயச் சீலமாகவும் மேற்கொண்டு ஒழுகினர். அப்பரடிகளின் அருள் வரலாற்றை விரித்துரைக்கும் போது, " காவளர்த்தும் குளம்தொட்டும் கடப்பாடுவழுவாமல்" அப்பரடிகள் தம் செல்வத்தைச் செலவிட்டதாகச் சேக்கிழார் குறிப்பிடுகிறார், அப்பரிடம் அன்பு பூண்டு ஒழுகிய அப்பூதி அடிகளும் திருநாவுக்கரசர் பெயரால் சாலை குளம், சோலை அமைத்த செய்தியையும் சேக்கிழார் குறித்துக் காட்டுகின்றார்.

**நாம் வளர பிறர் வளர வேண்டும் :**

சந்தான குரவருள் இரண்டாமவராகிய அருள்நந்தி சிவாசாரியர் உணர்த்தும் கருத்து ஒன்றினையும் நாம் இங்குச் சிந்தித்துப்பார்க்க வேண்டும். அவர் நான்கு வகையான அன்பு செலுத்தும் நிலையைக் குறிக்கின்றார். ஈசனிடத்தில் செலுத்தும் அன்பு, அடியாரிடத்தில் செலுத்தும் அன்பு, எல்லா உயிர்களிடத்திலும் செலுத்தும் அன்பு, தம்மிடம் தாமே கொள்ளும் அன்பு என்பன அவை. ஈசனிடத்தில் அன்பு கொள்ளாதவர் அடியாரிடத்தும் அன்புகொள்ளாதவரேயாவார். அடியாரிடத்தில் அன்பில்லாதவர் எல்லா உயிர்களிடத்தும் அன்பு இல்லாதவரே.இப்படிப்பட்டவர் தம்மிடத்தும் அன்பில்லாதவரேயாகிறார்.

ஆக, யார் ஒருவர் தம்மைத்தாமே நேசிக்கிருரோ, அவர் ஈசனை யும் அடியாரையும் எல்லா உயிர்களையும் அன்பு செலுத்தி நேசிக்க வேண்டும்.

" ஈசனுக்கு அன்பில்லார் அடியவர்க்கு அன்பில்லார்
எவ்வுயிர்க்கும் அன்பில்லார் தமக்கும் அன்பில்லார்
பேசுவதென் அறிவில்லாப் பிணங்களை "

என்று பிறஉயிர்களிடத்தில் அன்புசெலுத்தாதவர்களை 'அறி வில்லாப் பிணங்கள்' என்றும் சாடுகின்ருர்.

**உயிர்கள் பலவகை :**

உயிர்கள் பலதிறபட்டன. ஓரறிவு பெற்ற தாவரங்கள் முதல் ஆறறிவு பெற்ற மனிதன்வரை அறிவுநிலையில் உயிர்களை ஆறுவகையாகப் பிரிப்பர். ஓரறிவு என்பது உடம்பினுல் அறிவது; புல் மரம் முதலியன இவ்வகையைச் சார்ந்தவை ஈரறிவு என்பது உடல், வாய் இவ்விரண்டால் உணரும் அறிவு, நத்தை, கிளிஞ்சல் முதலியன. மூவறிவு என்பது உடல், வாய், மூக்கு இம்மூன்ருல் உணரும் அறிவு; கறையான், எறும்பு முதலியன. நாலறிவு என்பது, உடல், வாய், மூக்கு, கண் என்னும் நான்கால் உணரும் அறிவு; நண்டு, வண்டுமுதலியன. ஐந்தறிவு என்பது உடல், வாய், மூக்கு, கண், காது என்னும் ஐந்தால் உணரும் அறிவு; முதலை, ஆமை, விலங்குகள் முதலியன. ஆறறிவு என்பது மேற்கூறிய ஐந்து அறிவுடன் மனத்தால் உணரும் அறிவு. இதுவே பகுத்தறிவு எனப்படுவது. மக்கள், தேவர் இவ்வகையினர். இந்த ஆறு திறப்பட்ட அறிவு நிலையைப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த தொல்காப்பியர்,

" ஒன்றறி வதுவே உற்றறி வதுவே
இரண்டறி வதுவே அதனெடு நாவே
மூன்றறி வதுவே அவற்ருெடு மூக்கே
நான்கறி வதுவே அவற்ருெடு கண்ணே
ஐந்தறி வதுவே அவற்ருெடு செவியே
ஆறறி வதுவே அவற்ருெடு மனனே
நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத் தினரே '

என்று தமக்குமுன் வாழ்ந்தோர் நெறிப்படுத்தியதாக வகுத் துரைக்கின்ருர்.

ஆறு அறிவு படைத்த மனிதன் தன்னிலும் தாழ்ந்த அறிவுடைய உயிர்களைக் காக்கும் கடமைப் பொறுப்புடையவன். இதனை நன்கு சிந்திக்காமல் – மரம் செடி கொடிகளையும் பிற உயிர்களையும் காக்காமல் – துன்புறுத்துவது அறமாகாது. மேலும், தன்னிலும் தாழ்ந்த அறிவுடைய உயிர்களிடமிருந்து தான் பலநன்மைகளைப்பெற்றுக் கொண்டு, அவ்வுயிர்களுக்குத் தீங்கு இழைப்பதும், பாதுகாவலாக இல்லாமையும் பகுத்தறிவு படைத்த மனிதனுக்கு நன்றி உணர்வு ஆகுமா, என்பதை எண்ணிப்பார்க்க வேண்டும்.

## முன்னோர் நெறி :

நம் முன்னோர்கள் தாம் வாழும் இடங்களைச் சுற்றியும், ஊர்ப்பொது இடங்களிலும், திருக்கோயில்களை ஒட்டியும் மரம், செடி, கொடிகளை வளர்த்துச் சோலைகளை உருவாக்கினர். பழங் காலத்தில் ஊர்களை அடையாளம் காட்டிக் கூறும்போது அதோ! தெரிகிறதே அது தான் ஒருதோப்பு இன்னஊர் என்று சொல்லும் பழக்கம் நிலவி இருந்தது. ஞானசம்பந்தர், தில்லையினின்றும் திருமுதுகுன்றத்தலயாத்திரையாகச்செல்லும்வழியில் எருக்கத்தம்புலியூரின் மருங்கில் சென்றபோது, உடன்சென்ற திருநீலகண்ட யாழ்ப்பாணர் ஞானசம்பந்தரை வணங்கி, " கார்நெருங்கு சோலை சூழ் இப்பதி அடியனேன் பதி" என்று கூறியதாகச் சேக்கிழார் அருளியமை இதற்குத் தக்கசான்றாகும். சாலைகளில் மரங்களை வைத்து வளர்த்த பெருமை நம் பெரியோர்களுக்கு உண்டு. இதன் பயனாகச் சாலைகள், மழையால் அரிக்கப்படாமல், நல்லநிலையில் இருந்தன. சாலைகளில் செல்லும் வழிப்போக்கர்களுக்கும் வண்டிகளை இழுத்துச் செல்லும் மாடுகளுக்கும் குளிர்ச்சியான நல்ல நிழல் கிடைத்தது. நச்சுக் கிளி, பூச்சிகள்போன்ற, தீயவற்றை அழித்துத்தாவரங்களுக்கும் மனிதனுக்கும், பலவகையிலும் உதவி செய்யும் பறவைகளுக்கும் தங்கும் இடமாகச் சாலையில் விளங்கும் மரங்கள் உதவின. அம்மரங்கள் பறவைகளுக்குக் கனிமுதலிய உணவுப் பொருள்களையும் கொடுத்தன. ஆகவே சாலைகளில்ஆலமரம் போன்ற நிழல் தரும் நல்ல பெரு மரங்களை வளர்ப்பது பெரிதும் பயனுடையதாகும்.

அசோகர் காலம்முதல் சாலை ஓரங்களில் நிழல்தரும் – பயன் தரும் மரங்களை நட்டு வளர்த்துப் பாதுகாக்கும் பழக்கம் இந் நாட்டில் வளர்ந்து வந்துள்ளது. ராணி மங்கம்மாள் தன் ஆட்சிக் காலத்தில் சாலைகளில் மரங்களை நட்டுப் பயிராக்கியமையை 'மங்கம்மாள் சாலை மறந்து விடாதே சோலை" என்ற தொடர் இனிது விளக்கும்.

### சமயநெறியில் விஞ்ஞானம் :

இன்றைய விஞ்ஞான உண்மைகளை எல்லாம் தெய்விகக் கோட்பாடுகளில் அடக்கி உணர்த்திய நம்முன்னோர், மரங்களின் பயன்களை நன்குணர்ந்து அவற்றுக்குத் தெய்வத்தன்மை கூட்டிப் போற்றியுள்ளனர். வேம்பினையும் அரசினையும் ஒன்ருக வளர்த்து வணங்கி வழிபட்டனர். திருக்கோயில்கள் தோறும் வில்வம், மா, பலா, பாதிரி போன்ற பல்வேறு மரங்களைத் தல விருட்சங்களாக அமைத்துப் பாதுகாக்க வழிகோலினர். தல விருட்சங்களை வெறும் மரங்களாகக் கருதாமல் தெய்வங்களாகவே கருதி வலம் வந்து வழிபட்டனர். வேம்பு, அரசு போன்ற மரங்களை அடுப்பெரிக்கப் பயன்படுத்தக் கூடாது என்று தெய்விக சம்பிரதாயத்தின் பெயரால் மரங்களை வாழவைத்தனர்.

### தாவரங்களின் இருவகைப் பயன்கள் :

தாவரம் நேர்முகப் பலன் தருவதுண்டு; நேர்முகப் பலன் தருவதை அனைவரும் அறிவர். மறைமுகப் பலன் சிலருக்கே தெரியும். ஒரு மரம் காய், கனி, தளிர், இலை முதலியனவற்றைத் தருகிறது. மரம் தரும் பலனாக இவற்றை மட்டும் கருதினல் போதுமா? இவைகள் காட்சிக்குத் தெரிவன. கண்ணுக்குத் தெரியாத பயன்களும் உண்டு. ஒரு மனிதன் அன்றாடம் சுவாசிக்கும் பிராணவாயுவுக்கு மரமல்லவா உதவுகிறது! ஒரு மனிதன் சுவாசிக்கத் தேவையான பிராணவாயுவைத்தர 16 மரங்கள் தேவைஎன ஆய்வறிஞர் குறிப்பிட்டுள்ளனர். மரங்கள் அல்லனவற்றை ஏற்று நமக்கு நல்லவற்றைத் தருகின்றன. நாம் விடும் கரியமல வாயுவை உட்கொள்கின்றன. பிராண வாயுவாகிய நல்ல காற்றை நமக்குச் சுவாசிக்கத் தருவது மறைமுகப்பயன். ஆற்றங்கரையின் ஓரத்தில் இருக்கின்ற மரங்கள், தண்ணீர் ஆவியாகாதவாறு தடுத்து உதவுகின்றன. 'ஒலியைக் கட்டுப் படுத்துவதும் மரம் செடி கொடிகளே' என்று ஆய்வறிஞர் அறிவித்திருக்கின்றனர். இப்படி மறைமுக, நேர்முகப்பலன்களை மரங்கள் தருகின்றன.

### மரங்களைப் பற்றிய ஓர் ஆய்வு :

1981 ஆம் வருடம்சனவரி மாதம் 4-ஆம் தேதி வாரணசியில் நடைபெற்ற விஞ்ஞான மாநாட்டில் (Science Congress) கல்கத்தா பல்கலைக்கழகப் பேராசிரியர் திரு. T. M. தாஸ் அவர்கள் "தாவரங்களும் அசுத்தங்களும்" (Plants and Pollution) என்ற தலைப்பில், தனது தலைமை உரையில் பேசிய ஆராய்ச்சிக் கட்டுரையின் சாரம் :-

| | |
|---|---|
| ஒருமரம் தனது 50 ஆண்டுக்கால வளர்ச்சியில் சமுதாயத்திற்குச் செய்த தொண்டின் மதிப்பு ... | ரூ. 15.7 லட்சம் |

## விபரம்

| | |
|---|---|
| பிராணவாயு உற்பத்தியின் விலை மதிப்பு ... | ரூ. 2.5 லட்சம் |
| வாயுமண்டல அசுத்தம் தவிர்க்கப் படுதலின் விலை மதிப்பு ... | ரூ. 5.0 லட்சம் |
| மண் அரிப்புத்தடுப்பு மண்வள அதிகரிப்பு இவைகளின் விலை மதிப்பு ... | ரூ. 2.5 லட்சம் |
| தண்ணீர் வீணாக்கப்படாமல் மறுமாற்றம் செய்தலும், வாயு மண்டலத்திலுள்ள தண்ணீரின் அளவு கட்டுப்படுத்தப் படுதலும் ஆகிய இவைகளின்விலை மதிப்பு | ரூ. 3.0 லட்சம் |
| பறவைகள் விலங்கினங்கள் இவைகளின் பாதுகாப்புக்கான உறைவிடமாக அமைதலின் விலை மதிப்பு ... | ரூ. 2.5 லட்சம் |
| புரதச்சத்து தயாரித்து உதவுதலின் (Protein Conversion) விலை மதிப்பு ... | ரூ. 0.2 லட்சம் |
| ஆக கூடுதல் ... | ரூ. 15.7 லட்சம் |

ஒருமரத்தின் பூ' பழம், மரத்தில் செய்யப்படும் பொருள்களாக உபயோகமாதல், எரிபொருளாக அமைதல் இவைகளின் விலைமதிப்பு மேற்கூறியவற்றில் அடங்க வில்லை

### நாம் வளர மரம் வளர்ப்போம் :

மனிதன் மரம் செடி கொடிகளை வளர்த்து மழையைப் பெறுகிறான்; நல்ல காற்றைப் பெறுகிறான்; மற்றநன்மைகளையும் பெறுகிறான். மரங்களைமனிதன் வளர்க்கிறான் என்பதைக்காட்டிலும், மரங்களால் மனிதன் தன்னை வளர்த்துக் கொள்கின்றான் என்பது மிகவும் பொருத்தமுடையதாகும்.

அரசு வனத்துறை வாயிலாக மரங்களை நட்டுப் பாதுகாக்கின்றது. மரம் வளர்த்தல் என்பது அரசுமட்டுமே செய்துமுடிக்கத்தக்க செயலன்று. நம்புறவாழ்வுக்கும், உயிர்ப்புக்கும் உறுதுணை செய்வன மரங்கள் என்பதை உணரும் ஒவ்வொருவரும்

தம் இல்லத் தோட்டங்களிலும், சாலைகளிலும், பொது இடங்களிலும் மரங்களை நட்டு வளர்க்க வேண்டும். வனமகோற்சவம் செய்து விட்டு மறுநாளே ஆடுகளை விட்டு மேய்ப்பதாலோ, அல்லது பாதுகாக்காமலே விடுவதாலோ ஒரு பயனுமில்லை.

மரம் நடுதலும் பாதுகாத்தலும் நாட்டுக்கும் வீட்டுக்கும் நன்மை பயக்கும் திட்டம். இத்தகைய நல்ல திட்டத்தினை மக்கள் தம்மை வாழ்விக்கும் திட்டம் என்பதை உணர்ந்து பொறுப்புணர்வுடன் செயல் படுத்த வேண்டும். மரம் வளர்த்து மாண புகள் பெறுவோம்.

காவளர்த்தும் குளந்தொட்டும் கடப்பாடு வழுவாமல்
மேவினர்க்கு வேண்டுவன மகிழ்ந்தளித்தும் விருந்தளித்தும்
நாவலர்க்கு வளம்பெருக நல்கியும்நா னிலத்துள்ளோர்
யாவருக்கும் தவிராத ஈகைவினைத் துறைநின்றார்.

— சேக்கிழார்.



---

## வாழ்வு சுவைக்க...

நமது வயிற்றில் உள்ள ஜீரண சக்திக்கு ஜாடராக்கினி என்றுபெயர். ஜாடராக்கினி என்றால் "வயிற்றிலுள்ள நெருப்பு" என்று பொருள். இந்த நெருப்பு எந்த அளவுக்குத் தீவிரமாகக் கொழுந்துவிட்டு எரிகிறதோ அந்த அளவுக்குத்தான் நாம் உண்ணும் உணவுகளும் நமக்குச் சுவையாக இருக்கும்.

வயிற்றிலே ஜாடராக்கினி என்னும் நெருப்பு இருப்பது போல நம் மனத்திலேயும் ஒரு நெருப்பு இருக்கிறது. அந்த நெருப்புக்கு 'தைர்யம்' என்று பெயர். இந்த தைர்யமானது நம் உள்ளத்தில் எந்த அளவுக்குத் தீவிரமாகக் கொழுந்துவிட்டு எரிகிறதோ அந்த அளவுக்கு இந்த உலக வாழ்க்கையும் நமக்குச் சுவையாக இருக்கும்.

— மருதூர் சித்தன்.

சத்யகங்கை – *18—3—1983.* நன்றி.

உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்

26 ஆவது குருமகாசந்நிதானம்

**ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்**

தருமையாதீனக் குருபூஜை விழாவையொட்டி
நடைபெற்ற சமயப் பயிற்சி வகுப்பினைத் தொடங்கிவைத்து

வழங்கியருளிய

# ஆசியுரை

23—5—1983

" வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம் "

" சீரணியும் நுதலின்விழி மழுமான் நாகம்
திருந்தும்எரி பொருந்துவிடம் தெரிந்தி டாமல்
தாரணி அன் பரைஆள அவர்போல் வந்த
சைவசிகா மணிஎவர்க்கும் தலைவன் எங்கோன்
காரணியும் நெடியபொழிற் கமலைவேந்தன்
கருணைமழை பொழியும்இரு கடைக்க ணுளன்
பாரணியும் ஞானசம் பந்தன் எந்தை
பரமன்இரு சரணமலர் பரவி வாழ்வாம் "

## குருபூஜை விழா!

இற்றைக்கு நானூற்றைம்பது ஆண்டுகட்கு முன்பு இவ்வாதீனத்தைத் தோற்றுவித்தருளிய ஆதி குருமுதல்வர் ஸ்ரீகுருஞான சம்பந்தரின் குருபூஜைப் பெருவிழா, இன்று தொடங்கிப் பதினொருநாட்கள் மிகச் சிறப்பாக நடைபெறவுள்ளது. வழக்கம் போல் இவ்வாண்டும் இவ்விழாவினை ஒட்டித் திருநெறிய தெய்வத் தமிழ் மாநாடும், சமயப்பயிற்சி வகுப்பும் நடைபெற உள்ளன. மேலும் குருமுதல்வர் ஜீவசமாதி கொண்டுள்ள

அருள்மிகு ஞானபுரீசுவரர் திருக்கோயிலின் பெருவிழாவும், இக் குருபூஜை விழாவோடு இணைத்துக் கொண்டாடப் பெறுகிறது. இவை நம்முடைய நன்றியறிதலை தெரிவித்துக் கொள்ளும் செயல்களே ஆகும்.

**நன்றி மறக்கலாமா ?**

தன்னை அறிவித்தான் தானுச்செய்தானைப் பின்னை மறத்தல் பிழை என்கிறார் மெய்கண்டார். இவ்வுலகில் நன்றி எனும் சொல்லைப் பல இடங்களிலும் பலரும் பயன்படுத்தி வருவதைப் பார்க்கிறோம். ஆனால் நன்றி எனும் சொல்லுக்குரிய நேரான பொருளை உணர்ந்து கொண்டவர்கள் அரிதாகவே இருக்கிறார்கள். நன்றிஎன்றால் நன்மைஎன்பது பொருளாகும். இக்கருத்திலேயே திருவள்ளுவரும், எந்த நன்மையைக் கொன்றாலும் உய்வுண்டு: ஆனால் ஒருவன் செய்த நன்மையினைக் கொன்றவனுக்கு உய்தி யில்லை எனும் பொருளில்,

" எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு "

என்று கூறுகின்றார். எனவே எவரும் பிறர் செய்த நன்மையை மறக்காமல் இருக்கப் பழகிக் கொள்ளுதல் அவசியமாகும்.

தமக்கு நன்மைகள் செய்த பலரைப் பலர் மறக்காமல் இன்று நன்றியுணர்வோடு போற்றி வாழ்கிறார்கள். அறிவு புகட்டிய ஆசிரியர்களை, பொருளுதவி செய்து ஆளாக்கி விட்ட ஆன்றோர்களை, பணிவாய்ப்புத் தந்து வளர்த்துவிட்ட பெரி யோர்களை, உடம்பை ஆக்கித்தந்த பெற்றோர்களை மறக்காமல் சிலர் வாழ்ந்து வருகிறார்கள்; பிறரும் அங்ஙனம் வாழ வேண்டு மென்று வற்புறுத்திக் கூறுகின்றார்கள். இது பாராட்டத்தக்கதும், பின்பற்றத்தக்கதும் ஆகும். ஆனால், இவர்களை மட்டும் மறக் காமல் இருப்பதனாலேயே நன்றியுணர்வோடு நாம் வாழ்ந்து வருவதாக எண்ணுதல் முறையாகாது. உலகத்திலேயே யாரா லும் செய்ய முடியாத நன்மையினைச் செய்தஒருவர் இருக்கிறார். அவர்தான் இவ்வளவிற்கும் நிமித்த காரணமான இறைவன். அவரை மறத்தல்கூடாது என்று எண்ணி அவரை வழிபடுவதும், அவரைக் கொண்டாடும் விழாவில் கலந்துகொள்வதும், நாம் செய்யக்கூடிய மிகப்பெரிய நன்றியுடைய செயல்களாகும். அவ்விறைவன், நாம் தாயின் கருவறைக்கு வருவதற்கு முன்பு அறிவும் உணர்வும் அற்ற கேவலநிலையில் கிடந்த நம்மைத் தாயின் கருவறையில் புகுத்திப் பிறவியைக் கொடுத்து

நாளும் வளர்த்து முடிவில் பேரின்ப மாகிய முத்திப் பேற்றை நல்கும் நிரந்தரத் தாய் தந்தையாவார் இறைவரே யாவார். இதனைத் தாயுமான சுவாமிகள்,

" காரிட்ட ஆணவக் கருவறையில் அறிவற்ற
கண்ணிலாக் குழவியைப் போற்
கட்டுண் டிருந்தஎமை வெளியில்விட் டல்லலாங்
காப்பிட்ட தற்கிசைந்த
பேரிட்டு மெய்யென்று பேசுபாழ்ம் பொய்யுடல்
பெலக்கவினை அமுதமூட்டிப்
பெரியபுவ னத்திடை போக்குவர வுறுகின்ற
பெரியவிளை யாட்டமைத்து " ......

என்ற பாடலில் விளக்கி அருளுகின்றார். அறிவும் உணர்வும் தோன்றி வளர்ந்த நிலையில் மனிதர்கள் எவரும் உதவுவர். அவ்வறிவும் உணர்வும் இல்லாத காலத்தில் யாரும் செய்யமுடியாத பேருதவியினை இறைவன் ஒருவரே செய்ய முடியும். எனவே இப்பேருதவியினைச் செய்த பெருமானையும், அவரையறிவித்த குருநாதரையும் நினைவதும், வழிபடுவதும், இன்றியமையா நன்றிக் கடமைகளாகும்.

இப்படிக் கூறுவதால் பெருமானையும், குருவையும் நினைந்து வழிபடுவதாகிய நன்றியினைச் செய்தால் போதும் என்று எண்ணுதல் கூடாது. அப்பெருமானின் அருளைச் சுமந்து வரும் தாய்தந்தையரையும் மற்றவர்களையும் மறக்காமல் இருத்தலும் அவசியமாகும். இறைவனை நினைவதால் இவர்களை மறப்பதோ இவர்களை நினைவதால் இறைவனை மறப்பதோ, கூடாது.

**ஈசனுக்கு அன்புடையார் :**

இன்னுமொன்றும் இங்கே சிந்தித்தல் அவசியமாகும். இத்தகைய அன்பினை உலக மக்களிடைக் காட்டுவதற்குக் கூட, ஆண்டவன் மீது நாம் செலுத்தும் அன்பு அடிப்படையாகும். ஆண்டவன் மீது அன்பில்லாதவர் இவ்வுலகிலுள்ள எவ்வுயிர் மீதும் அன்பில்லாதவர் ஆகிவிடுவர். ஏன்? தம்மீது கூட அன்பில்லாதவர் ஆகிவிடுவர். இக்கருத்தைச் சிவஞான சித்தியார்,

" ஈசனுக்கன் பில்லா ரடியவர்க்கன் பில்லார்
எவ்வுயிர்க்கு மன்பில்லார் தமக்குமன் பில்லார்
பேசுவதென் னறிவிலாப் பிணங்களை நா மிணங்கிற்
பிறப்பினிலு மிறப்பினிலும் பிணங்கிடுவர் "

என விளக்குகிறது. ஆகவே இவ்வுலக மக்கள் மீதும் உலக உயிர்கள் மீதும் அன்போடும் நன்றியோடும் வாழ வேண்டுமெனில், அதற்கு முதற்கண் ஆண்டவன்மீதும், அவன் அடியார்கள் மீதும் அன்போடும் நன்றியோடும் இருத்தலே அடிப்படையாகும்.

## வழிபாடு ஏன் ?

இன்று பலர் ஆண்டவனை வழிபடுவது ஆண்டவனுக்காக என்று எண்ணித்தவருக விமர்சனம் செய்து வருகின்றனர். அபிடேகம் செய்வதும், அர்ச்சிப்பதும், பூமாலைகள் புனைந்தேத்துவதும், பாசுரங்கள் பாடித்துதிப்பதும் பெருமானுக்காக அல்ல. இவைபலவும் செய்வதால் செய்பவரின்வாழ்வு வளம்பெறுகிறது என்பதே உண்மை. இதற்கு உலகியல் உதாரணம் ஒன்றை ஒப்பிட்டுப் பார்க்கலாம். ஓர் அலுவலகத்தில் பல பிரிவினர் பணியாற்றுகின்றனர். எழுத்தர், (clerk) தலைமை எழுத்தர், (Head clerk) கணக்கர், (Aeeoundant) காசாளர் (cashir) மற்றும் கண்காணிப்பாளர் (Suprindendent) என்று அவர்களின் பிரிவு அமைகின்றது. இவர்களில் எழுத்தராக விளங்குபவர் தலைமை எழுத்தர்மீது அன்பு செலுத்துவதால் எழுத்தர் பயன்பெறுகிருர்; தலைமை எழுத்தர்பயன் பெறவேண்டும் எனில் அவர் அவருக்கு மேல் பதவியிலுள்ள கணக்கர் மீது அன்பு செலுத்தி நலமடைகிருர். இதே போன்று தான் அன்பர்கள் இறைவன்மீது அன்பு செலுத்தினுல் இவர்கள் பயன்பெறுகிருர்கள்.

இங்கு அன்பு செலுத்துவது என்பது மேலதிகாரிக்குப் பொருளையோ பணத்தையோ கொண்டுபோய்க் கொடுத்தல் என்பது பொருளில்லை. அவர் பணிபுரியும் அலுவலகத்திற்கும் தன் மேலதிகாரிக்கும் பணிவுடன் பணிசெய்து உண்மை நெஞ்சோடு உழைத்தல் என்பதாகும். எனவே அன்பு, வழிபாடு என்பதே கடமை தவருத பணியைக்குறிக்கும் அதனுல்தான், "செய்யும் தொழிலே தெய்வம். அதில் திறமை யதுவே செல்வம்" என்று பாரதியார் கூறினுர்.

இங்ஙனம் நம்மை உயர்த்திக் கொள்ள நாம் வழிபாட்டை மேற்கொள்ளுதல் தேவைப்படுகிறது. பரம்பொருள் நம்மைக் கரையேற்றவே காத்திருக்கின்றது. அதற்காகவே இவ்வாருன உடம்பையும் இவ்வுலகையும் படைத்துத்தந்திருக்கிறது. அத்தகைய கருணையுடைய பரம்பொருளைநினைத்து அன்பு செலுத்த வேண்டியது நமது கடமையாகும். இத்தகைய நல்ல பல கருத்துக்களைச் சிந்திக்கவே இது போன்ற பயிற்சி வகுப்புக்கள் உதவும்.

**தருமபுரம் – விளக்கம் :**

இவ்வாதீனம் அமைந்துள்ள இத்தருமபுரம் பற்றியும் இங்குச் சிந்தித்தல் நலம்பயக்கும். இத்தருமபுரம் தருமனின் பாவம் நீக்கிய புண்ணியத் தலமாகும். தருமன் பூசித்த இடம் ஆகையால் தருமபுரம் எனப் பெயர்பெற்றது. யமதருமன் திருக் கடவூரில் இறைவனின் திருவடியினுல் தண்டிக்கப்பெற்ருன் என்பது வரலாறு. இவ்வரலாற்றில் சிலர் ஒரு கேள்வி கேட்கின் றனர். தருமன் தன்பணியாகிய உயிர்பறித்தலைத்தானே செய்தான்; அப்படியிருக்க ஆண்டவன் அவனைத் தண்டிக்க லாமா? என்று கேட்கின்றனர். இது ஆழ்ந்து சிந்திக்கத்தக்க தாகும். தருமனின்கடமை உயிர்களைப்பறிப்பதுதான் என்ருலும் அக்கடமையைச் செய்யும் பொழுதும் சிவனடியார்களைக் கண்டால் அவர்களைப் பணிந்து அகன்று விடுதலே அவனுக் குரிய தருமமாகும். இதனை நக்கீரதேவர் தாம் பாடிய கயிலை பாதி காளத்திபாதி எனும்நூலில் தருமனே தன்தூதுவர்களுக்குக் கூறுவதாக அமைத்து ஒரு பாடல் பாடியுள்ளார்.

“ தொழுது நமனும்தன் தூதுவர்க்குச் சொல்லும்
வழுவில்சீர்க் காளத்தி மன்னன் — பழுதிலாப்
பத்தர்களைக் கண்டாற் பணிந்தகலப் போமின்கள்
எத்துணையும் சேய்த்தாக என்று ”

என்பது அப்பாடல். இத்தர்மத்தினை மறந்து யமதருமன் மார்க்கண்டேயரின் உயிரைப் பறிக்கப் பாசக்கயிறு வீசினன். இச்செயலால் தருமனுகிய யமன் தண்டிக்கப் பட்டான். இதுவே அக்கேள்விக்குரிய பதிலாகும்.

ஆண்டவனின் தண்டனையைப்பெற்றும், தருமன் எப்படிப் பிழைத்துக்கொண்டான் என்பதற்கும் ஒருவிளக்கம் காணலாம். தருமனை ஆண்டவன் உதைக்கும் பொழுது தம் இடது திருவடியினுல் தான் உதைத்தருளுகின்ருர். இறைவனின் இடது திருவடி அருள்சுரக்கும் அம்மையின் திருவடி என்பதால் அவன் பிழைத்துக் கொள்ள வாய்ப்பு நேர்ந்தது. இறைவன் காலனைத் தம் இடதுபாதத்தால் உதைத்தருளினர் என்பதனை அருணகிரிநாதர் திருக்கடவூர்த் திருப்புகழில் குறித்தருளுகின்ருர்

“ கூற்றும ரித்திட வேயுதை பார்வதி
யார்க்குமி னித்தபெண் ணுகிய மான்மகள்
கோட்டுமு லைக்கதி பாகட வூருறை பெருமாளே ”

என்பது அத்திருப்புகழ் வரிகள்.

## தண்டிப்பதும் தயையின் வெளிப்பாடே !

ஆண்டவன் தண்டிப்பதும் அருள் வெளிப்பாடே ஆகும் இவ்வுலகில் பெரியோர்கள் தண்டிப்பதை அன்பின் செயல் என்று எடுத்துக் கொள்ளுதல் தக்கதாகும். ஒரு மாணவன் தவறு செய்கின்றான் என்றால் அப்பொழுது நாம் அவனைத் தண்டிப்பதை வெறுப்பான். ஆனால் அவனே பிற்காலத்தில் இத்தண்டனையின் மகத்துவத்தை உணர்ந்து மகிழ்வான். ஆகவே பெரியோர்கள் பிள்ளைகள் தவறு செய்யும் பொழுது தண்டிக்கத் தயங்கக் கூடாது. அவன் வெறுப்பான் என்றோ வீட்டை மறப்பான் என்றோ, விட்டுவிடுதல் கூடாது. நாம் கொடுக்கும் தண்டனை அவன் வளர்ச்சிக்குப் பெரிதும் உதவும் என்னும் எண்ணத்தில் தண்டித்தல் தக்கதாகும். எந்த மாணவன் இளமையில் தண்டிக்கப்பட்டபொழுது அத்தண்டனையை வெறுத்தானோ, அவனே பின்னர் வளர்ந்து பக்குவம் வந்தநிலையில் அத்தண்டனையைப் பிறருக்கு அளிக்க முற்படுகின்றான் என்பதையும், இவ்வுலகில் காணுகின்றோம். எனவே அருள் உள்ளம்கொண்டோர் தண்டித்தலும் தயையின்வெளிப்பாடே ஆகும். இதனையும் இக்குருபூஜைச் சிந்தனையாகக் கொள்ளுங்கள்.

## அறிவும் உணர்வும் :

இன்னும் ஒன்று; இப்பாரதநாடு பழம்பெரும்நாடு என்பதிலும் பழங்கலையிலும் சமயப்பண்பாட்டிலும் மேலோங்கியநாடு என்பதிலும் யாரும் கருத்துவேறுபாடு கொள்வதில்லை. ஆனால் சிலர் இவற்றில் சிலவற்றைப் புரிந்துகொள்ள மறுக்கின்றனர். சிலர்வரலாற்றுநோக்கில் ஆய்வுநிகழ்த்திக் குறைகாணுகின்றனர். இங்கு ஒன்றனைச் சிந்தித்தல் அவசியமாகும். இக்கால மக்களிடையே ஒரு பெருங்குறை நிலவுகிறது. வரலாற்று முறையில் ஆய்வோர்களிடையே இறையுணர்வு இல்லை ; இறையுணர்வு வகையில் ஆய்வோர்களிடையே வரலாற்று அறிவு இல்லை. இந்நிலை பெரும்பாலும் இருக்கிறது. இதனால்தான் குறைகள் ஏற்படுகின்றன. வரலாற்று அறிவும் இறையுணர்வும் இணைந்து ஆய்வுசெய்தால் குறைநீங்கி உண்மைகள் விளங்கும். இந்த அடிப்படையில் ஒரு செய்தியினை ஈண்டுசிந்திப்போம்.

## அந்தணர் – பிராமணர் :

திருஞானசம்பந்தர் காலத்தில் வாழ்ந்த அந்தணர்கள் ஸ்மார்த்த பிராமணர்கள் இல்லை என்று ஒருகருத்து நிலவுகிறது.

இதற்குச் சில ஆதாரங்களும் சொல்லப்படுகின்றன. சங்கரர் தோன்றிய பிறகுதான் ஸ்மிருதிக்கு முக்கியத்துவம் கொடுக்கப் பட்டது. அதனுல் ஸ்மார்த்த பிராமணர்கள் உருவாயினர் என்பது வரலாற்றுச் செய்தி. சுருதி என்பது வேதம். ஸ்மிருதி என்பது மனு முதலியன, சங்கரர் காலம் கி. பி. எட்டாம் நூற் ருண்டு என ஆய்வறிஞர்கள் முடிவு செய்துள்ளனர். எனவே எட்டாம் நூற்ருண்டுக்கு முற்பட்ட அந்தணர்கள் ஸ்மார்த்த பிராமணர்களாக இருக்கவில்லை எனக்கூறுவர். அங்ஙன மெனில் ஞானசம்பந்தர் காலத்திய அந்தணர்கள் வைதிக சைவர்களாகவே இருந்தனர். அதனுல் தான் சேக்கிழார் திருஞானசம்பந்தர் புராணத்தில் அந்தணர் குடியினை விளக்கும் பொழுது "மாபிரண்டும் சைவநெறி வழிவந்த கேண்மையினுர்" என்று கூறுகின்ருர். ஞானசம்பந்தரின் அவதாரம் கூறவந்த பொழுது, "சிவம்பெருக்கும் பிள்ளையார் திருவவதாரம் செய்தார்" என்று மொழிகின்ருர். எனவே ஞானசம்பந்தர் காலத்திய அந்தணர்கள் சைவ நெறி வழுவாதவர்களாயிருந்தனர் என்று கொள்ளலாம். இக்கருத்து மேலும் சிந்திக்கத்தக்கதேயாம்.

**கலப்பு நாகரிகம் :**

தமிழர்களிடையே சிவவழிபாடு மிகப்பழங்காலத்தே இருந்தது என்பதனை வரலாற்று ஆய்வாளர்கள் கூறுகின்றனர். மொஹஞ்சதாரோ, ஹரப்பா போன்ற இடங்களில் அகழ்வாய் வில் கிடைத்த பல சிவலிங்கங்களே இதற்கு ஆதாரமாகும். ஆனுல் சமய நெறியாளர்கள் வேதம் தோன்றிய காலத்திற்குப் பிறகுதான் சிவவழிபாடு தோன்றியது என்று கூறுகின்றனர். நாம் முன்பு சிந்தித்தது போன்று வரலாற்று அறிவும் சமயவுணர் வும் கொண்டு இணைந்து சிந்தித்துப் பார்த்தால் இதுபோன்ற கருத்துக்களுக்கு நல்ல முடிவு கிடைக்கும்.

கால ஆய்வின்படி நாம் சில முடிவுகள் கொள்ளலாம். தமிழர் நாகரிகம் மிகப் பழங்காலத்தது. வேத நாகரிகம் அதற்கு அடுத்தநிலையது. இத்தமிழர் நாகரிகமும் வேதநாகரிகமும் இணைந்த ஒருகலப்பு நாகரிகம் பிற்காலத்துத் தோன்றியது என்று கொள்ளலாம். ஞானசம்பந்தர் போன்ற அருளாளர் களுக்கு வேதமும், தமிழ்ச் சைவமும் உடன்பாடாகவே இருந் தன. அதனுல்தான் சேக்கிழார்பெருமான் திருஞானசம்பந்தரின் வரலாற்றைத் தொடங்கும்பொழுதே, "வேதநெறி தழைத் தோங்க மிகுசைவத் துறைவிளங்க" என்று விளக்கியருளு கின்ருர். ஆதலின் நம் ஞானுசாரியர்களுக்கு உடன்பாடான

வேதநெறியையும் தமிழ்ச்சைவநெறியையும் நாமும்உடன்பட்டு ஏற்று வாழ்தலே தக்கதும் முறையுமாகும்.

இத்தகைய நற்சிந்தனைகளை மேற்கொள்வதும் அச்சிந்தனையின் நல்முடிவுகளை ஏற்றுக்கொண்டு வாழத் தலைப்படுவதும் இன்றைய மக்களின் கடமைகளாகும். இக்கடமையுணர்ச்சியினைத் தூண்டவே சமயப்பயிற்சி வகுப்புக்கள் நடைபெறுகின்றன. இவ்வகுப்பில் பயிற்சி கொள்ளும் அன்பர்கள் நற்சிந்தனைகளை மேற்கொண்டு சைவமும் தமிழும் எங்கும் தழைக்கப் பாடுபடுவார்களாக!

**வாழ்த்து :**

திருக்கோயில் பெருவிழாவும் குருபூஜை விழாவும் இனிதே நிகழ்வுறவும், திருநெறிய தெய்வத்தமிழ்மாநாடும் சமயப்பயிற்சி வகுப்பும் நலமே நிகழவும், மாநாட்டிலும் வகுப்பிலும் கலந்து கொள்ளும் அன்பர்களும் பிறரும் நலம் பல பெற்று நீடு வாழவும், எல்லாம் வல்ல செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

குருவருள் பெருகுக !

குவலயம் ஓங்குக !!

---

## அன்பைப் பெருக்குக

1 மகிழ்தி மடநெஞ்சே மானுடரில் நீயும்
திகழ்தி பெருஞ்சேமம் சேர்ந்தாய் — இகழாதே
யாரென்பே யேனும் அணிந்துழல்வார்க் காட்பட்ட
பேரன்பே இன்னும் பெருக்கு.

## பிறவிக்கடல் நீந்துக

2 இனியோநாம் உய்ந்தோம் இறைவன் அருள்சேர்ந்தோம்
இனியோர் இடரில்லோம் நெஞ்சே — இனியோர்
வினைக்கடலை யாக்குவிக்கும் மீளாப் பிறவிக்
கனைக்கடலை நீந்தினேம் காண்.

— காரைக்காலம்மையார்.

# இலக்கிய - தத்துவ - இன்பம்

'சித்தாந்தப் புலவர்மணி'

திரு. ந. ரா. முருகவேள், M. A., M. O. L.

" இலக்கியத்திலும் தத்துவத்திலும் 'விருப்ப – ஆர்வம்' கொள்ளப்பெறுவது என்பது ஒரு பெரிய செயலும் பேறும் ஆகும். அஃது ஓர் அருமையான, கிடைத்தற்கரிய, ஒருவகைத் தனி அறிவாற்றல் ஆகும்."

மனிதர்கள் எல்லோருக்குமே, இலக்கியங்களைச் சுவைத்து நுகர்தல் என்பது இயலாது. இலக்கியங்களைப்பயின்று சுவைத்து நுகரும்திறம் என்பது, அவற்றைப் படைத்தளிக்கும் ஒருபெருங் கவிஞனின் செயல்போன்றே, ஓர் அரிய சிறந்த செயல் ஆகும். இதனை விளக்கும் பாடல்கள் கீழ்வருவன :–

இலக்கியத்தில் தத்துவத்தில் எல்லோர்க்கும்
விருப்பம்என்பது இருப்ப தில்லை;
நலக்கஒரு சிலர்தமக்கே நல்லஅந்த
அருட்பேறு நண்ணு கிற்கும்;
கலக்கமறும் வண்டுகளே தேன்தேடிக்
களித்தருந்தும்; கவினூர்ந்து ஓங்கித்
துலக்கமுறும் மயில்கள்தாம் தோகைவிரித்து
ஆடும்; குயில்தான் சூழ்ந்து பாடும்!

நன்றுயர்ந்த இலக்கியநூல் தத்துவநூல்
என்பவற்றை, நயந்து கற்றே
இன்புறுதல் எல்லோர்க்கும் இயல்வதில்லை;
இலக்கியங்கள் தம்மை ஆர்வம்
மன்பெரிதும் கொண்டு,ஓதி மகிழ்தல்என்பது,
அவைபடைக்கும் மாட்சி போலும்!
துன்பமிகும் இவ்வுலகில் தூய இன்பம்
மற்றிதுபோல் உண்டோ? சொல்வீர்!

---

ஆங்கில அறிஞர், மேத்யூ ஆர்னல்ட் கருத்தைத் தழுவிய தமிழாக்கம்.

தருமையாதீனக் குருமுதல்வர் குருபூஜைவிழா
2—6—83



தஞ்சைமாவட்ட ஆட்சித்தலைவர்
திரு. S. மெய்கண்டதேவன் அவர்களுக்கும்,
மதுரை சிவகாமி மில் அதிபர்
கருமுத்து. திரு. S. சொக்கலிங்கம் செட்டியார் அவர்களுக்கும்
ஆசி அருளல்.

தருமையாதீனக் குருமுதல்வர் குருபூஜை விழா 29—5—'83.



ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களை, திருச்சிராப்பள்ளி பாரதிதாசன் பல்கலைக் கழகத் துணைவேந்தர், திரு. மணிசுந்தரம் அவர்கள் குடும்பத்துடன் வழிபட்டு ஆசி பெறுதல்.

தருமையாதீனக் குருமுதல்வர் குருபூஜைவிழாவில் 2—6—83



ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள்
பக்தர்கள் புடைசூழப் பட்டினப்பிரவேசத்திற்கு எழுந்தருளல்

கட்டுரை எண். 37

# அபிராமி அந்தாதி

புலவர். திரு. K. சந்தானராமன், M A., B. Lit.,
D. P. P. A,. D. U. N., I. U.

**பொருளே! பொருள்முடிக்கும் போகமே! அரும் போகம் [செய்யும்**
**மருளே! மருளில் வரும் தெருளே! என்மனத்து வஞ்சத்து**
**இருள் ஏதுமின்றி ஒளிவெளியாகி இருக்கும் உன்றன்**
**அருள் ஏது அறிகின்றிலேன்! அம்புயாதனத்து [அம்பிகையே! 36**

## அ. அம்புயாதனத்து அம்பிகையே!

(1) தாமரை மலராகிய இருக்கையில் வீற்றிருக்கும் அபிராமியாகிய அன்னையே என அழைக்கிறார்.

(2) 'அம்புஜ – ஆஸனம்' என்னும் வடமொழிச் சொல் 'தாமரை – இருக்கை' எனப்பொருள்படும். அதுவே அம்புயாதனம் என்றாயிற்று. 'பத்மாஸனா' என்று சகஸ்ரநாமத்திலும் நாமம் உண்டு. அதன் பொருளும் 'தாமரை இருக்கையாள் என்பதேயாகும்.

(3) செந்தாமரை, வெண்தாமரை, அடியவரின் இதயத் தாமரை, மூலாதாரம் முதல் சகஸ்ராரம் ஈறாகவுள்ள ஆதாரத் தாமரைகள் ஆகிய அனைத்திலும் அமருபவளை அம்புயாதனத்து அம்பிகை என்றார்.

(4) அம்புஜாஸனம் அல்லது பத்மாஸனம் என்பது காலை மடித்து அமரும் ஒரு வகை இருக்கை நிலை. கங்கை கொண்ட சோழபுரத்துக் கலைமகள் முதலியோர் இந்த பத்மாஸன நிலையில் அமர்ந்திருப்பர் எனச்சிற்ப நூலினரும், தொல்பொருளியலினரும் கூறுவர்.

(5) 'அம்பிகா' என்பதும் அவளது ஆயிரம் பெயர்களுள் ஒன்று. இச்சை, கிரியை ஞானம் ஆகிய முச்சக்திகளின் சமஷ்டி

(கூட்டு) வடிவமே ' அம்பிகா ' எனவும், தாயைப் போல் அரவணைத்துக் கட்டாய ஓய்வும் நிம்மதியும் தருபவள் ' அம்பிகா ' எனவும், இரவு அல்லது ராத்ரிதேவியே அம்பிகா எனவும் உரையாசிரியர்கள் விளக்குகின்றனர்.

' ராத்ரி ஸூக்தம் ' என்ற வேதத்தின்பகுதி, இரவுநேரத்தின் இருள், தூக்கம், போகவேட்கை ஆகிய அனைத்தும் அவள் செயலே எனவும் அவற்றினை உருவாக்குபவளே ராத்ரிதேவி எனவும் துதிக்கிறது.

அரும் போகம் செய்யும் மருளினைக்குறிக்கும் இப்பாடலில் அம்மருளுக்குக் காரணமான ' அம்பிகா ' என்ற பெயரால் அழைக்கிறார்.

## ஆ. பொருளே!

(1) அனைத்துப் பொருள்களின் வடிவாய் இருப்பவளைப் பொருளே! என அழைக்கிறார்.

(2) பொருள்களை நம் முன்னோர் ஸ்தாவரம், (அசையாப் பொருள்), ஜங்கமம் (அசையும் பொருள்) என இருவகைப் படுத்தினர்.

மேலும் திடப்பொருள் திரவப்பொருள் என்றும் வகுத்தனர்.

இலக்கணநூலார் அஃறிணை, உயர்திணை என இரு கூறுக்கினர்.

அறிவியலார் உயிருள்ள பொருட்கள் ( Aninate or living things ) எனவும், உயிரற்ற பொருள்கள் ( Inaninate or non - Liviug things ) எனவும் பகுத்தனர்.

அவசியப்பொருள்கள் ( Necessithis ) வசதிப்பொருட்கள் (Comforts) ஆடம்பர் அல்லது போகப் பொருட்கள் (Luxuries) எனப் பொருளியல் முக்கூறுக்கியது.

தோன்றுதல், வளருதல், மாறுதல், தேய்தல், மறைதல் ஆகிய மாற்றங்கட்கு உட்பட்ட இவை அனைத்தும் பொருட்களே. அம்மாற்றங்கட்கு உட்படாத ஒன்றே மெய்ப்பொருள்.

(3) தனம், தானியம், முதலிய எண்வகைச்செல்வங்களின் அல்லது அஷ்ட ஐச்வர்யங்களின் வடிவாய் நின்று அருளுபவளும் அம்பிகையே.

(4) இவ்வுலகுக்குப் பொருளும், அவ்வுலகுக்கு அருளும் தேவையன்றே? இவ்வுலகாயும் இதில் காணும் பொருள்களாயும் விரிந்து நிற்பாள் அன்னை.

(5) " பொன்னே! மணியே பொருளே! அருளே! " என்று கந்தரநுபூதியில் முருகனையும் ' பொருளே! என அருணகிரியார் அழைக்கக் காண்கிறோம்.

## இ. பொருள் முடிக்கும் போகமே!

(1) அப்பொருள்களால் எய்தும் இன்பநுகர்வாக இருப்பவளும் அவளே!

(2) ' போகம் ' என்பது ' சுகானுபவம் ' அல்லது ' இன்ப நுகர்வு ' எனப் பொருள்படும். ஆண் பெண் உடலுறவே போகம் என்று குறுகிய பொருள் கொள்ளுதல் தவறாகும்.

மலர் என்ற பொருளின் மணம்.

கனி என்ற பொருளின் சுவை.

யாழ் என்ற பொருளின் இசை

சிலை என்ற பொருளின் அழகு

குழந்தை என்ற பொருளின் மெய்தீண்டல்.

இவ்வாறு ஐம்புலனுக்கும் இன்பநுகர்வு கிட்டுகிறது. அவ்வின்ப நுகர்வினை முடித்து வைப்பது பொருட்களேயாகும். ஆனால் எல்லா இடங்களிலும் எல்லாக் காலங்களிலும் எல்லாருக்கும் அப்பொருள்கள் இன்ப நுகர்வினை அளிப்பதில்லை.

" வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது "

என்றவாறு நுகர்தல் அரிதாகவே போய்விடுகிறது.

பொருள்களைக் கொடுத்து அப்பொருள்களின் இன்ப நுகர்வாகவும் கடவுளே இருந்தாலன்றி, அப்பொருட்கள் பயனற்றவையே. அம்பிகை அப்போகமாய் நின்றும் அருள்புரிகிறாள்.

(3) தாங்கொணவெப்பமும், துன்பமும்தரும் பொருளாகிய ' நீற்றறை ' (சுண்ணும்புக்காளவாய்) அப்பர் பெருமானுக்கு செவிக்கு விருந்தாகும் மாசில் வீணையாகவும், கண்ணுக்கு விருந்தாகும் மாலைமதியாகவும், திருமேனியினை வருடிச் செல்லும் வீசு தென்றலாகவும் இருந்தது எதனால்?

பொருள்கள் மட்டும் போகத்தை முடிப்பவை அல்ல. ஆனால் அப்போகவுணர்வாக இறைவனின் திருவடி நிழல் இருக்கிற தென்பதனையே அது உணர்த்துகிறதன்றோ?

ஆகவே பொருள் முடித்துத் தரும்போக உணர்வாக இருப்பவள் அம்பிகையே என அபிராமி பட்டரும் கூறினார்.

(4) பொன் முதலிய செல்வங்களும், அவை முடிக்கும் போகமும், அதனிடை உண்டாகும் பிழைகளும், அவை நீங்கலும் ஆகிய அனைத்தும் இறைவன் செயலே என்பதனை

" பொன்னும் மெய்ப்பொருளும் தருவானை
போகமும் திருவும் புணர்ப்பானை
பின்னை என்பிழையைப் பொறுப்பானைப்
பிழையெலாம் தவிரப் பணிப்பானை "

என்ற சுந்தரர் தேவார அடிகள் விளக்குகின்றன.

**ஈ. அரும்போகம் செய்யும் மருளே! மருளில் வரும்தெருளே!**

(1) அவ்வரிய போகத்தில் பெரிதும் ஈடுபடுத்தி மயக்கும் மறைப்பாற்றலைச் செய்யும் மாயாதேவியாக இருப்பவளும், அம்மாயை நீங்கியபின் ஏற்படும் தெளிவாக இருப்பவளும் அவளே என்கிறார்.

(2) பொருட்கள் முடித்து வைக்கும் இன்ப நுகர்வில் பெரிதும் ஈடுபட்டு அதுவே இலக்கெனக் கொண்டு மற்ற இரண்டு இலக்குகளாகிய ( புருஷார்த்தங்களாகிய ) அறத்தினையும் வீட்டினையும் மறந்து, உண்மை நிலையினை அறிய முடியாத மயக்கநிலை எய்தி, மக்கள் அல்லல் படுகின்றனர். அதனைக் கொடுக்கும் மருட்சக்தியாக அல்லது மாயாதேவியாக இருப்பவள் அன்னையே ஆதலால் அவளை 'மருளே!' என்றார்.

(3) அம்மாயையில் சிக்குண்டு இன்பவேட்கையால் கூடாதனவற்றையெல்லாம் செய்து துன்பம் துய்க்கின்றனர். அத்துன்பத்தின் காரணமாக இறுதியில் தெளிவு பிறக்கிறது. அத்தெளிவும் அன்னை வடிவே ஆதலால் 'தெருளே!' என்றார்.

(4) கோசிகன் என்னும் மன்னன் தவம் புரிந்தபொழுது மாயையினுல் பிடிபட்டுத் திலோத்தமையிடம் மயங்கி மகளையும் பெற்ருன். இது அரும் போகம் செய்யும் மருள்!

பின் தெளிந்து, முயன்று, விசுவாமித்திரன் என்னும் முனிவனுனன். இது 'தெருள்'.

(5) கந்தபுராணத்துக் காசிபன் மாயையின் பால் மக்களைப் பெற்றது மருள். பின் தெளிந்து விலகியது தெருள்!

(6) அருணகிரிநாதரின் வாழ்வின் முற்பகுதி அரும்போகம் செய்த மருள். முருகனை உணர்ந்தது தெருள். அது பிற்பகுதி.

(7) " தோய்ந்தே கடந்தான் திருவின் தொடர்போக பௌவம் " என்று கூறுமளவிற்கு போகம் நுகர்ந்த தசரதன், காதுக்கடியில் கண்ட ஒரு நரைமுடியினுல் தெளிவெய்தி, காடு

சென்று கடுந்தவம் புரிய எண்ணினுன் என இராமாயணம் காட்டுகிறது. இதுவும் மருளில் வந்த தெருள்.

(8) இளமை – அரசபோகம் – அழகிய மனைவி – அரிய தோர் மழலைச் செல்வம் – இவை அனைத்தும் நிறைந்த போக வாழ்க்கை. இதற்கிடையில் ஒருநாள் அவர் கண்ட சில காட்சிகள் – சிந்திக்கவைத்தன. சித்தார்த்தர் புத்தர் ஆனுர், இதுவும் மருளில் வந்த தெருள்.

(9) இன்னும் பலர் நடை முறையில் இளமைவேகத்தினுல் மாயையில் சிக்குண்டு திரிந்து, பின் தெளிந்து, ஞானத்துடன் பேசியும், எழுதியும் செயல் பட்டும் வருவது கண்கூடு.

(10) போகத்துககு ஏதுவான ஏராளமான செல்வம், எண்ணற்ற அறிவியல் கண்டு பிடிப்புகள் என எல்லாம் பெற்றிருக்கும் மேல்நாட்டினர் பலர், 'மனநிம்மதி மட்டும் இல்லை' என ஏங்கி தாம் பெற்றிருப்பது உண்மையான இன்பமல்ல என்பதனை உணர்ந்து "ஹரே ராமா, ஹரே கிருஷ்ணு" இயக்கத் தில் சேருவதும், 'சைவ சித்தாந்தா சர்ச்'சை நாடுவதும் இன்று நிலவும் நிலை. இதுவும் மருளில் வந்ததெருளே! என்பது தெளிவு.

(11) "மா..... யே!" என்று தரங்கிணி இராகத்தின் இசை நயத்தினைக் குழைத்து அன்னையினை அழைத்தார் சங்கீதமூர்த்தி ஸ்ரீ முத்துசுவாமி தீட்சதர் அவர்கள்.

அகங் குழைந்து போன அம்பிகை அவர்முன் நின்றுள்!

அவளைக்கண்ட தீட்சதர் 'போய் விடு' என்ற பொருளில் 'ஜாஹி' என்றுர்.

"யாரைப்போகச் சொல்லுகிறீர்? என்னையா? என்றுள் அம்பிகை.

"ஆம்! உன்னையேதான்! 'த்வம் ஜாஹி"

"என்ன ஓய்! தீட்சதரே உமது கீர்த்தனையில் "மாயே!" என்று அழைத்தீர் என்று வந்தேன் இப்போது போய்விடு என்கிறீர்? நீர் பாடுவது கீர்த்தனமா? போக்கிரித்தனமா? என் கிறுள் அன்னை புன்முறுவலுடன்.

"மாயே! த்வம் ஜாஹி, மாம்பாஹி த்வம் காஹி........"

"மாயே! நீ போய்விடு என்னைக் காப்பாற்று" என்ற பொருளில் தீட்சதர் கிருதியைத் தொடர்கிறுர்.

வந்திருக்கும் அன்னை மாயாதேவியாகிய மருட்சக்தி என் பதனை அறிந்து கொண்ட தீட்சதர் நீபோய்விடு என்றுர்.

மருட்சக்தியும் அருட்சக்தியும் தானே என்பதனை சிறந்த தேவி பக்தரான தீட்சதர் நன்கு உணர்ந்திருக்கிறார் என அறிந்து மகிழ்ந்த அன்னையும் இப்போதுதன் கோலத்தைமாற்றி அருளோடு புன்முறுவல் பூத்து நிற்கிறாள்.

இப்போது தீட்சதர் த்வம் யாஹி நீ வருக! (ஆயே!) (வருவாயாக) என்றெல்லாம் அழைத்து மகிழ்கிறார்.

இது ஒரு கற்பனைக் காட்சி, இக்கற்பனை தோன்ற அமைந்திருக்கும் 'மாயே!' என்ற கிருதியில் அரும்போகம் செய்யும் மருளாகவும், தெருளாகவும் அவள் இருப்பதனை குறிப்பிடுகிறார்

(12) 'மஹா போகா' – 'பெரும் போக வடிவினள்' என்றும் மஹா மாயா – பெரும் 'பெரும் மருட்சக்தியானவள்' என்றும் சகஸ்ரநாமமும் குறிப்பிடுகிறது.

## உ. என்மனத்து வஞ்சத்து...... ...ஏது? அறிகின்றிலேன்.

(1) எனதுமனதில் மாயவிருள் ஏதும்இல்லாமல் சிதாகாசம் என்னும் ஒளிமிக்கவெளியாய் இருக்கும் நினது அருளினை யான் என்னவென்று அறிந்திலேன்.

அவளது அருளால் அரும் போகம் செய்யும் மருள் நீங்கி விட்டது. தெருளும் தோன்றிவிட்டது. அதனால் மாயவிருள் மறைந்து மனதில் ஒளிமிக்க பரவெளிக் காட்சி கிட்டுகிறது.

இல்லாததை இருப்பது போல் காட்டும் மாயவிருளை 'வஞ்சத்து இருள்' என்றார். அவ்விருள் ஏமாற்றி ஒன்றில் ஈடுபடுத்திஇன்னல்விளைக்கும் இயல்பினது ஆதலினால்வஞ்சத்து இருள் என்றார்

நமது உள்ளத்தின்கண் உள்ள ஆகாயம் அல்லது வெளியினை சிதாகாசம் என்றும் தகராகாசம் என்றும் கூறுவர். அவ்விடத்தில் ஒளிமிக்க பரவெளியாக அன்னையின் அருட்காட்சி கிட்டும் சிறப்பினை ஏதென்றறியேன் என்கிறார்.

இந்த ஒளிவெளியான சிதாகாசக் காட்சியே இருளடர்ந்த அமாவாசையினை ஒளிநிறைந்த பௌர்ணமி என்று கூறவைத்த காரணங்களுள் ஒன்றாகும்.

(3) "பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளை" என்று மணிவாசகர் கூறுவதற்கேற்ப பெற்றெடுத்து, தனு கரண புவன போகங்களைத் தந்து, மயக்கம் விளைவித்து பின்பு தெளிவையும் ஏற்படுத்தி, பக்குவமெய்திய நிலையில் தனது அருட்காட்சிக்குப் பாத்திரமாக்குகிறாள் அம்பிகை என்பது இப்பாடலின் திரண்ட கருத்து.

பொய்யான பொருட்களில் மயங்கி ஏமாந்து இன்னல் எய்தாதிருத்தல் இப்பாடலின் பாராயண பலன் ஆகும்.

# திருவருட்பாத் திரட்டு

( பொழிப்புரையுடன் )

**வித்துவான் திருமதி. ப. நீலா** எம். ஏ.,
தமிழ்ப்பேராசிரியை,
தருமையாதீனப் பல்கலைக் கல்லூரி, தருமபுரம்.

உன்ஒரு கையிற்கொம்பு வெள்ளியங் கயிலையாம்
ஒருகை கிம்புரிக் கொம்பு
உயர்மேரு கிரியாகும் மேனிசெவ் வானமாம்
ஓங்கு கங்கணம் அனந்தன்
வன்னிரவி சந்திரன் திருநயனம் ஏழெனும்
மகாசலதிகள் மும்மதம்
வளர்சண்ட மாருதம் செவிமா ருதம்சக்ர
வாளகிரி நீள்துதிக்கை
பன்னுநான் மறைசிலம்பு ஓங்கு காலாக்கினி
பரந்தநற் கோபாக்கினி
பரிபா கரைக் கொண்டு குற்றேவல் கொள்கின்ற
பரப்பிர்ம மத்தகசம் நீ
கன்னெஞ்சன் என்மலக் காட்டைமுரி யாததென்
காசிவாழ் துண்டிராச
கணபதி யெனும்பெரிய குணமேரு வேஅருட்
கருணை நிதிக்கடவுளே. 3

(பொழிப்புரை) காசிவாழ் துண்டி ராசனே! உன்கையி லிருக்கும் ஒற்றைக் கொம்பு வெள்ளி மலையாம் கயிலை. மற்றைப் பொற்பூணணிந்த கொம்பு உயர் மேருமலை. திருமேனி செவ்வானமாகும். உயர்கங்கணம் அனந்தனெனும் பாம்பே. தீ, இரவி, மதி என்ற மூன்றும் முக்கண்ணும். ஏழுகடல்கள் மும்மதமாகும். வலிமையும் மென்மையு முடைய காற்றுகளே செவிகள். சக்கரவாள மலையே துதிக்கை. நான்கென்று சொல்லப்படும் வேதங்கள் சிலம்பாம். வடவைத்தீயே – உன் கோபத்தீ. பக்குவிகளைக் குற்றவேல் கொள்ளும் மேலானகளிறு நீயே. ஆனால் களிற்றின் இயல்புக்கேற்ப – கல்மனத்தனும் எனது மலக்காட்டினை மட்டும் நீஇன்னமும் முறிக்கவில்லையே!

(கருத்து) மலத்தளையை நீக்கி மகிழ்வு தருக.

(குறிப்புரை) கிம்புரி - தந்தத்தில் அணிவிக்கப்படும்பூண். 'கிம்புரியின் கொம்பொடித்து வெம்புதினை இடிப்போம்' (குற். குறவஞ்சி) வன்னி - தீ. ரவி - கதிரவன் 'இரவி சதகோடிகள் இருட்டென்ன' (இதேநூல்-13. 3) மகாசலதி - பெரிய கடல் 'விந்தய ஹிமாச்சல யமுனா கங்கா, உச்சல ஜலதிதரங்கா' - இந்தியப்புகழ் இந்தியக் கடல் அலைகளால் ஜபிக்கப்படுகிறது. (இரவிந்தரநாத்தாகூர்) மாருதம்-காற்று. சண்ட - வலிமையான. முன்னே அடைமொழி வந்து பின்னே வாராததால் பின்னேயுள்ள மாருதம் மந்த மாருத மாயிற்று - தென்றல். சண்ட + மந்த. பரிபாகர்கள் - பக்குவிகள். பரப்பிரும்மம் - மேலான கடவுள். மத்தகஜம் - யானை. விநாயகரை யானை என்றதற்கேற்ப மலத்தொகுதியைக் காடாக்கியது காண்க. காட்டை அழிப்பதில் யானைக்கு அதிக ஈடுபாடு உண்டன்றோ.

குஞ்சரக் கன்றுநீ ஒழியாமல் நிற்கின்ற
கூடம்என் இதய வெளியாம்
குழந்தைவடி வாம்இளைய பன்னிருகை மழகளிறு
கூடிவிளை யாடி நிற்க
அஞ்சுதொழில் உனது விளையாட் டாகமதசலம்
அருட்கிரியை ஞானம் இச்சை
ஆகஐந்தொழில் நடத் தகராதிநாதவொலி
ஆனையுன் பெருமுழக்காம்
நெஞ்சில் நிறைவாந் திரோதான கோபத்தைநீ
நீக்கிஎன் தற்போதமாம்
நிறைகவளம் அருள்வாயினுல் உண்டு கர்ச்சித்து
நீமகிழ்வ தென்றே சொலாய்
கஞ்சன்முதலோர் தொழக்கங்கைநதி சூழ்பெரிய
காசிவாழ் துண்டிராச
கணபதியெனும் பெரியகுண மேருவே அருட்
கருணை நிதிக்கடவுளே. 4

(பெ - ரை) பிரமன் முதலியோர் தொழ காசியிலிருக்கும் துண்டிராச கணபதியே! குஞ்சர கன்றாகிய நீ என் இதயமாம் கூடத்தில் நீங்காமல் நிற்கின்றாய். பன்னிருகை குழந்தைக் களிறும் முருகன் உன்னுடன் விளையாடி நிற்க, அஞ்சு (ஐந்து) தொழிலை விளையாட்டாகச் செய்கிறாய். மும்மதம் - கிரியை ஞானம் இச்சையைக்குறிக்கஐந்தொழில்நிகழ்த்துகிறாய். பிரணவ ஒலியே உன்பெருமுழக்கமாகியது. என் நெஞ்சிலுள்ள திரோ

ஞானத்தை அகற்றித், தற்போத மென்பதையே கவளமாகக் கொண்டு உண்டு கர்ச்சித்து மகிழ்வதென்றே !

(க - து) ஆணவம் அகற்றிட வருக.

(கு - ரை) அப்பன் களிருகி அம்மை பிடியானதால் - இது கன்ருயிற்று. 'நற்குஞ்சரக்கன்று நண்ணின் கலைஞானம், கற்குஞ் சரக்கன்று காண்' (திருவருட் - கடவுள் வாழ்த்து.) பன்னிருகை மழகளிறு - முருகன். இல்பொருளுவமை. ஐந்து - அஞ்சு போலி தகராதிநாதவொலி - இருதயவெளியில் நிறைந்தஒலி. தகரம் - சிறுமை. இருதயவெளிக்குப் பெயர் தகராகாசம்' திரோதானம் - மறைப்பு. தற்போதம் - ஆன்மபோதம். 'பசு போதக் கவளமிட களித்துண்டு, கருணைக்யெனும் வெள்ள மழைபொழி சித்திவேழத்தை நினைந்து, வருவினைகள் தீர்ப் பாம்' - (திருவிளை. விநாயகர் வணக்கம்.) கஞ்சன் - தாமரை யில் இருப்பவன் - பிரும்மா.

தேவர்கண பதிவித்தி யாதரர்கள் கணபதி
சிவயோக முனிகணபதி
சித்தர் கணபதி பூதாகணபதி ஞானமே
திகழ் இராக்கதர் கணபதி
கேவலமில் அசுரர்கண பதிகருடர் கணபதி
கிளர்தயித் தியர்கணபதி
கின்னரர்கள் கணபதி கிம்புருடர் கணபதி
கெந்தருவ ர்தம்கணபதி
பாவமறு போக பூமியர்கள் கணபதிஅம்
பரத்தில் வாசிகள் கணபதி
பசாசர் கணபதி உடுக்கணபதி இயக்கர்கண
பதிஉரகர்தம் கணபதி
காவல் என்றுரை செய்பதி னெண்கண பதிப்பெரிய
காசிவாழ் துண்டிராச
கணபதி யெனும்பெரிய குணமேரு வே அருட்
கருணை நிதிக்கடவுளே. 5

(பெ - ரை) கணங்களின் தலைவனாக இருப்பவன் - கணபதி. பதினெட்டுக்கணங்களுக்கும் அவரேதலைவர். தேவர், வித்தியாதரர், சிவயோகிகள், சித்தர், பூதர், ஞானம் கூடிய இராக்காதர், தனிமையாக இல்லாமல் கூட்டமாகவே இருக்கும்

அசுரர், கருடர், தயித்தியர், கின்னரர், கிம்புருடர், கந்தர்வர், போகபூமியர், விண்ணில் வசிப்போர், பசாசர், விண்மீன்கள், இயக்கர், நாகரென்ற பதினெட்டுக் கணத்திற்கும் தலைவராய் இருந்து காவல் செய்யும் பெருமையுடையவரே! காசிவாழ் கணபதியே!

(க – து) பதினெண்கணத்தலைவனும் நீயேயாகிக் காக்கின்ருய்.

(கு–ரை) பதினெண்கணம்–'பதினெண் கணனும் ஏத்தவும் படுமே' (புற–நா. 1) ஞானம் திகழ் இராக்கதர் – மிக அதிக பலமுடையோர்களான இராவணுதி அரக்கர்கள் ஞானம் பெற்றிருந்தமை அறிக. கேவலம் – தனி. அசுரர்களுக்குக் கூட்டமே பலம் தரும் எனக் குறித்தது நயமாம். பாவமறு போகபூமி – புண்ணியம் செய்தலால் அடையத்தகும் உலகு – உத்தரகுரு. 'அத்தகுதிருவின் அருந்தவமுடித்தோர் உத்தரகுருவின் ஒப்பத் தோன்றி' (சிலப்பதி – 2, 9, 10.) உரகம் – பாம்பு. உரம் – மார்பு-கம் – செலவு. மார்பினல் செல்வது. 'உரகம தெடுத்தாடு மேகார மீதின் மிசை வரவேணும். (திருப்புகழ் – 141.) 'துளையெயிற்றுரகக் கச்சு' (சிலப் – வேட்டுவ – 59.) (தொடரும்)

---

# “ நல்லார் வணங்கப் படுவான் ”

‘ சித்தாந்தப் புலவர்மணி ’

**திரு. ந. ரா. முருகவேள், M. A., M. O. L.**

ஆசிரியர் – திருக்கோயில் – சென்னை.

**முன்னுரை — நீலகேசி :**

“நல்லார் வணங்கப்படுவான்” என்னும் இச் சொற்றொடர், ஒரு பாடலின் தொடக்கக் குறிப்பு ஆகும். அப்பாடல், நீலகேசி எனும் நூலின் முதற்பாடலாக வருகின்றது. நீலகேசி என்பது தமிழில் ‘ஐஞ்சிறு காப்பியங்கள்’ என வழங்கப்படுவன வற்றுள் ஒன்று, ஐஞ்சிறு காப்பியங்களாவன: நீலகேசி, சூளா மணி, உதயணன் கதை, யசோதரகாவியம் நாககுமார காவியம் என்பன. நீலகேசி ஒருசமண சமயநூல். அது தமிழில் ஐம் பெருங்காப்பியங்களுள் ஒன்றாக விளங்கியிருந்து. மறைந்து போன, குண்டலகேசி என்னும் பௌத்தசமய நூலுக்கு எதிர் நூலாக எழுந்த தென்பர்.

“ நல்லார் வணங்கப் படுவான்; பிறப்பாதி நான்கு
இல்லான்: உயிர்கட்கு இடர்தீர்த்து உயர்இன்பம் ஆக்கும்
சொல்லான்; தருமச் சுடரான்எனும் தொன்மையினான்;
எல்லாம் உணர்ந்தான்! அவனே இறையாக ஏத்தி ”

எனவரும் அருகன் துதியோடு நீலகேசி தொடங்குகின்றது. இந் நூலுக்கு 14–ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவர் எனக்கருதப்படும் சமய திவாகர வாமன முனிவர் என்பவர், சிறந்ததோர் உரை யினைத் திறம்பட இயற்றியுள்ளார். நுண்மாண் நுழைபுலம் மிக்க அவ்வுரையாசிரியர், நீலகேசியின் முதற்பாடலாக வரும் இச் செய்யுளுக்கு, விரிவானதோர் உரை எழுதியுள்ளார்.

அதிலும், ‘ நல்லார் வணங்கப்படுவான் ’ என்னும் தொடர் குறித்து வரைந்துள்ள சிறந்த உரைப் பகுதிகள், மிகவும் சுவை பொருந்தித் திகழ்கின்றன. “ நல்லார் வணங்கப் படுவான் ” அருகனே யன்றிப் புத்தன் அல்லன் என்பதனை, அவ்வுரையா சிரியர் பெரிதும் வற்புறுத்தி எழுதிச் செல்லுகின்றார். புத்தர் பிரான் பலவகைக் குற்றங்களை யுடையவர் எனவும், அக் குற்றங்கள் ஒன்றும் இல்லாதவர் தமது சமயக் கடவுளாகிய அருகதேவன் ஒருவரே எனவும், அவர் எழுதிச் செல்லுந்திறன் வியப்பை விளைவிப்பதோடு அவர்தம் வழக்கீட்டு நெறியின்

வன்மையினையும் நன்கினிது புலப்படுத்தி, மிக்க இலக்கியச் சுவை பயப்பதுடன் ஒருவகை மகிழ்ச்சி யுணர்வினையும் எழுப்புகின்றது. ஆதலின் அவருரையின் சிறந்த பகுதிகளை மட்டும், ஈண்டு அகழ்ந்தெடுத்துச் சுருங்கத் தொகுத்துக் காண்போம்:

## நீலகேசி உரைப்பகுதி :

(1) இனி, நல்லார் வணங்கப்படுதல் முதலாயின, சுகதன் (புத்தன்) முதலாயினர்க்கு எய்தாதாயினன்றே, அருகப் பரமேட்டிக்கு மங்கலமாவது? அஃதென்னை பெற்றவாறெனின், குற்றமில்லாதாரையன்றே நல்லார் வணங்குவது! இம்சையும் அசத்தியமும் ஸ்தேயமும் காமமும் திரஷ்ணையும் முதலாயின குற்றங்கள், சுகதன் முதலாயினர்க்கு உண்மையின், அவர் நல்லார் வணங்கப்படார் என்பது.

(2) சுகதனுக்குக் கொலை முதலாயின எங்ஙனம் உளவாகின்றன? எனில், ஆத்ம வதத்தாலும், மாம்ச பட்சணத்தாலும் கொலையுண்டென்பது ...... பஞ்ச அங்கமும் கூடிற் கொலையாம், அன்றெனில் ஆகாது என்று உபதேசித்தலாலும், சுகதனுக்குக் கொலை யுண்டென்பது.

(3) இனி, அசத்திய கதனமும் (பொய் பேசுதலும்) சுகதனுக்கு உண்டு; புண்ணிய பாவங்கள் செய்தவன் தத்க்ஷனத்தே நசிக்கின்றானதலால், தத்பலங்கள் பெறான் என்பதறிந்தும், இன்னபுண்ணியஞ் செய்தான், இன்ன பலன்பெறும், இன்ன பாபஞ் செய்தான், இன்ன பலன்பெறும் என்று சொல்கின்றானதலால்.........

(4) இனி, சுகதனுக்குக் களவும் உண்டு; குடையும் செருப்பும் முதலாயின ஒருகாலத்துத் தானம்பெற்றுப்பிறிதொரு காலத்து அவற்றை என்னுடையன என்று பற்றுமாதலால்...... களவுண்டென்பது.

(5) இனி, சுகதனுக்குக் காம சேவையும் உண்டு; இவனுக்குத் தாரமும் புத்திரரும் உண்மை பெறப்படுதலின் என்பது.

(6) இனி, சுகதனுக்குத் த்ரஷ்ணையும் (ஆசையும்) உண்டு மாமிசம் பட்சித்தலும், தாம்பூல சேவையும், பல்லுத் துடைத்தலும், ஸ்நானபானங்களும், குடை செருப்பு முதலாயின கைக்கோடலும், த்ரஷ்ணையொழியக் கூடாமையின் என்பது.

(7) இனி, இவன் காமபரவசனுமாம்; உறக்கத்தான் மயங்குதலும், பசியால் வருந்தி நாடோறும் பிட்சை யிரத்தலும் உண்மையின் என்பது.

(8) இனி, இவன் பொருள் இருந்தவாறு (தத்துவஞானம்) அறியானுமாம்; என்னை? பதார்த்தங்கள் நிரம்சமாய் க்ஷணத்திற் கெடும் என்று சொன்னவன்தானே, முன்பு நான் முயலாய்ப் பிறந்து தர்மோபதேசம் பண்ணினேன்; இப்பொழுது புத்தன் ஆயினேன் என்று, ஆகமோபதேசம் பண்ணினன் ஆதலால். இக்கொலை முதலாயின, இழுக்குத் தலைவரும் என்றுதவிர்ந்தான் அல்லன்; உலகம் தவிர்தலில் தவிர்ந்தான் என்றமையானும் பெறுதும்.

(9) இனி, உயிர்கட்கு இடர்தீர்த்து உயர் இன்பம் ஆக்கும் சொல்லுடைமையும், பிறர்க்கு இல்லை; அவர்கள் உயிர்கட்கு இடர் ஆக்கும் சொல்லினர் ஆதலால். என்னையெனின், சுகதன் புண்ணிய பாபங்களைச் செய்தார்க்குத் தத்பல போக்த்ருத்துவம் (அதன் பயனை நுகரும் தன்மை) இல்லை என்பது அறிந்தும், புண்ணியம் செய்மின், பாபம் ஒழிமின் என்று உபதேசித்து, உயிர்களைக் கிலேசிப்பிக்கின்றான் ஆதலாலும்; ஐந்தங்கங்களிற் குறையக் கொன்றார்க்குக் கொலையில்லை என்றும், மாமிசம் தின்பார்க்குக் கொலையில்லை என்றும் கொலைமேற் புரிவித்தும்; காற்பொன்னிற் றாழ்ந்தது களவன்று என்று களவின்மேற் புரிவித்தும்; எண் மாத்திரை வைக்கிற் காமம் அன்று என்று காமத்தின்மேற் புரிவித்தும்; கள் என்னும் உள்ளமின்றிக் கட்குடித்தார்க்குக் குற்றமில்லை என்று மகாயானம் மந்திர யானங்கள் சொல்லிக் கட்குடிப்பித்தும்; பிறன் பொய் என்று அறியாமற் சொல்லும் பொய் பொய்யன்று என்று பொய்மேற் புரிவித்தும்; மற்றும் பல பிரகாரத்தாலும் சர்வ சீவன்களையும் இகபர லோகத்துத் துன்புறுவிக்கின்றான் ஆதலாலும்; மகௌஷத பண்டிதனை ஜாதகத்துத் தான் ஒரு ராசாவுக்கு மந்திரியாய்ப் பிரதிபட்சத்து இராசாக்களை வஞ்சித்தும்; ஸ்திரீயையும் பிள்ளைகளையும் பிறர்க்குக் கொடுத்துப் பீடித்தும்; பிறவாற்றானும் உயிர்களைத் துன்புறுவிக்கின்றமையின், உயிர்கட்கு இடர் ஆக்கும் சொல்லான் என்பது பெறுதும்.

(10) இனி, எல்லாம் உணர்தலும் சுகதாதிகட்குக் கூடாதாம். சுகதன் க்ஷணந்தோறும் கெடுகின்றானாதலால், தான் உளன் ஆகிய ஏக க்ஷணத்திலுள்ள ஒன்றையும் அறிவதல்லது பிற அறியானும் ......... அன்றியும், பௌத்தரால் சுகதன் சர்வக்ஞன் அல்லன் என்பது சொல்லவும் பட்டது ......... "

**முடிவுரை :**

இங்ஙனம் சமண நூலாகிய நீலகேசி, பௌத்தர்களைப் பழித்துரைக்குமாறு போல, பௌத்தசமயநூலாகிய மணிமேகலை முதலியவற்றிற் சமணர்களைப் பழித்துரைக்கும் குறிப்புக்கள் பல உள்ளமை காணலாம். ......... செந்தமிழ்ச் சிவநெறித் தலைவராகிய நமது அருமைத் திருஞானசம்பந்தப் பெருமானைச் சமயப்பொறை இல்லாதவர் எனக் கூறி இகழ்ந்துரைக்கும் ஒரு சிலர், சமண பௌத்தர்களே 'சுந்தோப சுந்தர்கள்' போலத், தம்முள் இங்ஙனம் ஒருவரோடு ஒருவர் இகலிப் பொருது கொண்ட திறங்களை அறிந்து கருதி, உண்மையுணர்ந்து உய்ய முயலற்பாலராவர்.



---

**கடிதம்:**

முரு. வைத்திலிங்கம் தஞ்சாவூர்
ஆசிரியர் 22—4—83
126. வண்டிக்காரத்தெரு

தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் கமலத் திருவடிகளைப் போற்றித் துதிக்கிறேன்.

நான் ஒரு தீவிர நாத்திகனாக இருந்தேன். தருமையாதீனத்தில் 3—6—82 முதல் 13—6—82 வரை நடைபெற்ற சமயப் பயிற்சி வகுப்பு என்னை தீவிர ஆத்திகனாக மாற்றியது.

எனக்கு வந்த சோதனைகள் தெய்வநிந்தனையால் ஏற்பட்டவை என்பதை உணர்ந்து திருந்தி வாழ்கிறேன். அங்குவந்து திரும்பியதுமுதல் நாள்தோறும் பக்திப் பாடல்களைப் படிக்கிறேன். இறைவன்மேல் பாரத்தைப்போட்டு நான் வாழ்ந்து வரத்தொடங்கியதுமுதல் எனக்கு நன்மையும், வெற்றியுமே கிடைத்துவருகின்றன. ஆசிரியர் சங்கக் கூட்டம், பொதுக் கூட்டம், திருமண விழாக்கள் ஆகியவற்றில் சமயக்கருத்துக்களைச் சிந்தனைச்செய்துவருகின்றேன். நாள்தோறும் வானொலியில் சமயச்சிந்தனை உரைகளைக் கேட்டும், செவ்வாய்க்கிழமை தோறும் சிவன்கோயில், வெள்ளிக்கிழமை முருகன்கோயில் ஆகியவற்றுக்குச் சென்று வழிபட்டும் வருகிறேன்.

# நல்லிசை ஞான சம்பந்தன்

திரு. இரா. பொன்னு எம். ஏ , எம் ஃபில்.,

வரலாற்றுப்புலம், மதுரை காமராசர் பல்கலைக் கழகம்,

" ஞானத்தின் திருவுருவை நான்மறையின் தனித்துணையை
வானத்தின் மிசையன்றி மண்ணில்வளர் மதிக் கொழுந்தைத்
தேனக்க மலர் கொன்றைச் செஞ்சடையார் சீர்தொடுக்குங்
கானத்தின் எழுபிறப்பைக் கண் களிப்பக் கண்டார்கள் ".

பல்லவர்காலம் தமிழர் சமய வாழ்வினில் வியத்தகு மாற்றம் கண்டது. நாயன்மார்களும் ஆழ்வார்களும் தங்களின் தேன் மதுரப் பாக்களால் தமிழ் மண்ணில் பக்தி மணம் பரப்பினர். அதன் விளைவாக, சமண, சாக்கிய சமயங்கள் வீழ்ச்சி நிலைக்குத் தள்ளப்பட்டதுடன், தமிழர் சமய வாழ்வில் சைவம் வைணவம் நிலைநிறுத்தப்பட்டது. தமிழ்மக்கள் பக்தி நெறியினில் வழி நடத்திச் செல்லப்பட்டனர். பக்தி நெறி புகட்டிய சைவ அடியார்களுள் நாவுக்கரசர், ஞானசம்பந்தர், சுந்தரர் ஆகியோர் முதன்மை இடம்பெறுகின்றனர். "மூவர்முதலிகள்" எனத்தமிழ்ச் சைவ உலகு அவர்களைப் போற்றுகின்றது. மூவருள்ளும் ஞான சம்பந்தர் முக்கியமானவராகத் திகழ்கின்ருர். குறுகிய காலமே வாழ்ந்தார் எனினும் சம்பந்தர் தனது வாழ்வு முழுமையும் சைவ நெறி தழைத்திடவே அர்ப்பணம் செய்தவர் ஆவர். சைவத்தின் எழுச்சி காண நடத்திய பக்திப் பயணத்தில் தமிழையும் இசை யையும் போற்றி நின்ற அவரது திருத்தொண்டின் பெற்றி சாலச் சிறந்ததாகும். இக்கட்டுரையில் தமிழிசையில் ஞானசம்பந்தர் கொண்டிருந்த பக்தி ஆராயப்படுகிறது.

இயல் இசை நாடகமாய் விளங்கும் முத்தமிழில் இரண்டாம் இடம் வகிக்கும் இசைக்கலை, சங்க காலத் தமிழர் வாழ்வில் சிறப்பிடம் பெற்றிருந்தது. என்பதனைப் பாட்டும் தொகையும் அறியத் தருகின்றன. " சங்கத்தமிழ் மூன்றும் தா " என ஔவையார் கேட்டிடும் சங்கத் தமிழில் இசைத்தமிழ் உள்ள டங்கி நிற்பதை எளிதில் உணரலாம். சங்க மருவிய காலத்தே இசைத் தமிழ் வளர்ச்சியில் ஒரு தேக்க நிலை ஏற்பட்டது. களப் பிரர்களின் ஆட்சிக் காலத்தில் வளர்ச்சி கண்ட சமண, சாக்கிய சமயங்களின் அகமும் புறமும் தழுவிய தமிழர்களின் கலை

உணர்வு நோக்கினில், ஓர் வறட்சி நிலையினை உருவாகியது. இல்லறமே நல்லறமெனக் கொண்ட தமிழ்மண்ணில் துறவறம் திணிக்கப்பட்டு, தமிழர்தம் இன்ப வாழ்வு புறக்கணிக்கப் பட்டதின் விளைவாக இசை ஆர்வம் குன்றியது. இந்நிலையில் தான் ஞானசம்பந்தர் இன்னிசை மழை பொழிந்து தமிழ் மக்களின் இசை உணர்வினை வளப்படுத்தினர்.

தமிழர்களின் கலை உணர்வினை நன்கறிந்திருந்த ஞான சம்பந்தர், தனது பக்தி இயக்கப் பயணத்தில், மக்களின் வாழ் வியல் கண்ணோட்டத்தோடு தான் கொண்டிருந்த கலை ஆர்வத் தினை தமிழ் உலகுக்கு உணர்த்தினின்றார். 'கலைஞானசம்பந்தன்' எனவும், "எண்ணமர் பல்கலையான்" எனவும் அவர்தம் தேவாரப் பாமலர்கள் இயம்பிடுவது சம்பந்தரின் கலை ஆர்வத் தினையும் கலைத் திறனையும் உணர்த்துவதாய் உள்ளது.

கலைகளிலும் இசைக்கலையில் மிக்க நாட்டம் உள்ளவராய் விளங்கினர். முதல்வனை சிவபெருமானை ஏழிசையினனாய் கண்டார். சிறந்த இசைஞானியாகவும் இன்னிசை கேட்டபின் விரைந்தோடி வரும் இசைப் பிரியராகவும் இசைக்கு உருகும் இயல்புடையவராகவும் சிவபெருமான் விளங்குவதாய் உணர்ந் தார். பக்தர்களின் உண்மை அன்பிற்கு அடிமையாதல்போன்று, இசை பாடுவோருக்கும் அகப்படக் கூடியவராக சிவன் உள்ளான் என்பதனை தன் அனுபவத்தில் கண்டார். திருவீழி மிழலையில் இசைக்கு அடிமையாகியே அப்பரடிகளாருக்கும் சம்பந்தருக்கும் "படிக்காசு" இறைவன் வழங்கினன் என்பதை "தமிழொரு இசை கேட்கும் இச்சையால் காசு நித்தம் நல்கிய தாக" சுந்தரர் கூறுவது மெய்ப்பிப்பதாய் உள்ளது.

இசையின் மேல் தான் கொண்டிருந்த காதலை வெளிப் படுத்தும் முகமாக "இசைஞான சம்பந்தன்", "இசையார் தமிழ்விரகன்", "நல்லிசையாளன்", "துண்ணிய இன்னிசை யால் துதைந்து சொல்லிய ஞானசம்பந்தன்", "நாடிய தமிழ்க் கிளவியின்னிசை செய் ஞானசம்பந்தன்" என்று அவரே உரைப்பர். சம்பந்தர் இசையில் இயைந்த பாங்கினைக் கருத்தில் கொண்டு சுந்தரரும் "நல்லிசை ஞானசம்பந்தன்" எனவும், போற்றுவார். சேக்கிழாரோ "இயல் இசை தலைவனர்" எனப் பெருமைப்படக் கூறுவர்.

சம்பந்தர் தொடுத்த தேவாரத் திருமலர்கள்யாவும் இன்னி சையால் எழுந்தவையாகும். "ஈனமில்லாத வண்ணம் இசை யால் உரைத்ததமிழ்மாலை" எனவும் "இன்னிசையால்உரைத்த

பனுவல் " எனவும் சம்பந்தர் குறிப்பிடுவார். சம்பந்தரின்பாடல்கள் முதனடை, வாரம், கூடை, திரள் எனப்படும். இசையியக்கம் நான்கினுள் வாரப்பாட்டு வரிசையில் அடக்குவர். வாரத்தின் இயல்பு பற்றிச் சிலப்பதிகார அரும்பதவுரைகாரர் " நடையினும் ஒலியினும் " எழுத்தினும் நோக்கித் தொடையமைந்து ஒழுகும் தொன்மைத்து என்பர். சம்பந்தரின் பாடல்கள் தெய்வம் சுட்டிவரும் வாரப்பாட்டாகையால் "தெய்வம் சுட்டிய வாரப்பாட்டு " என்பார் ஔவை சு. துரைச்சாமிப் பிள்ளை.

சீர்காழியில் தன்னைச் சந்தித்த திருநீலக்கண்டயாழ்ப்பாணர் தனது பாக்களை யாழில் இட்டு இனிமையாக இசைத்ததைக் கேட்டு மகிழ்ந்த ஞானசம்பந்தர் " ஏழிசையும் பணிகொண்ட " யாழ்ப்பாணரை தான் செல்லும் இடம் தோறும் அழைத்துச் சென்று யாழிசையில் தனது பாடல்களைக் கேட்கலாயினர். சிவபக்தியை வெளிக்காட்டிடும் வகையில் சிவன் திருவருளாலே தான் இன்னிசைப் பாடல்களைப் பாட முடிந்ததெனக் கூறினர். " சிவன் இன்னருளால் தண்டமிழின் இன்னிசையெனப் பரவு பாடல் " என அவரது பாக்களைப் பற்றி அவரே கூறுவது சிவபக்தியோடு ஒன்றிய இசைத் தமிழைப் போற்றி நிற்பதைத்தான் காட்டுகிறது.

சம்பந்தர் காட்டிய இசை ஆர்வம், பக்தி இயக்கப் பெரியார்களிடம் ஓர் எழுச்சியை ஏற்படுத்தியது. இசை மூலமாகவும் சிவனருள் பெற முடியும் என்பது நிலை நிறுத்தப்பட்டது. நாயன்மார்களில் ஒருவரான ஆனய நாயனர் வேய்ங்குழலில் பஞ்சாட்சரத்தை இசைத்து சிவ தரிசனம் பெற்ருர். மேலும் சமய வாழ்வினில் அர்ச்சனைப் பாட்டென்ற பெயரில் இசைகொண்டு வழிபடும் பழக்கம் தோன்றிடக் காரணமாகவும் அமைந்தது. ஆலயங்களில் தேவாரப் பதிகங்கள் இசையோடு ஓதப்பெற்று வணங்கிடும் முறை சிறப்புப் பெறலாயிற்று. சோழ மன்னர் இராஜராஜன் ஆட்சி காலத்தின்போது இராஜராஜேஸ்வரம் கோயிலில் நாற்பத்தெட்டு பிடாரர்கள், ஒரு உடுக்கை இசைப்பவர், ஒரு கொட்டி மத்தளம் இசைப்பவர் என ஐம்பது இசைக் கலைஞர்கள் திருப்பதிகம் ஓதுவதற்காக நியமிக்கப்பட்டனர் என்பது கல்வெட்டுச் செய்தியில் அறியக்கிடக்கிறது. இது போன்று ஏராளமானகல்வெட்டுக்கள் இசையோடு திருப்பதிகம் ஓதுதலைக் கூறுவனவாய் உள்ளன. இன்றும் இசையோடு ஓதி நடத்திடும் வழிபாடு சிறப்புடன் நடைபெற்றுவருகிறது.

சம்பந்தரின் கலைஞானம், இன்னிசைப் பாடல்களைத் தந்து சைவநெறி தழைத்தோங்கிட உதவியது; அவரது நல்லிசை பின்னேயத்தமிழ்ப்பாவலர்களுக்குமுன்னேடியாகத்திகழ்ந்தது. தமிழர் சமுதாயத்தில் துயில் கொண்டிருந்த கலை உணர்வினை விழித்தெழச் செய்தது. சுருங்கக் கூறின் நல்லிசை ஞான சம்பந்தனல் மீட்டப்பட்ட இசைத்தமிழ், தமிழர் சமய வாழ் வோடு ஒன்றி ஒலித்துக்கொண்டிருக்கின்றது.

---

## சமயமும் கடவுளும்

சமயம் என்ருல், கடவுளுடன் கட்டுண்டிருப்பது; அதாவது உங்கள் ஒவ்வொரு மூச்சையும் கடவுள் ஆட்கொண்டிருக்கிருர். சமயக் கோட்பாடற்ற அரசியல் என்னைப்பொறுத்தவரை அழுக்கே; எப்பொழுதும் வெறுத்துத்தள்ளவேண்டியது அது.

அரசியலிலும்கூட நாம் கடவுள் ஆ யத்தை உண்டாக்க வேண்டும். சமூககாரியம், பொருளாதாரவேலை, அரசியல் நடவடிக்கை, கலப்பற்ற சமய சம்பந்தமானவேலை என்று அவற்றை ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாதபடி தனித்துப் பிரித்துவைத்துவிட முடியாது.

பெறுவதற்கரிய உண்மையான விடுதலையை அளிக்கக் கடவுள் நம்மிடம் கேட்பதெல்லாம் நம்மைநாமே முழுசரணுகதி செய்துவிடவேண்டும் என்பதே அன்றி வேறு இல்லை.

— மகாத்மாகாந்தி.

சத்யகங்கை - 15—3—83. நன்றி.

—❀—

## அறிந்துகொள்ள வேண்டியவை

இடுக்கண்கள் எத்தனை பெரிதாயிருப்பினும், அவற்றை எதிர்கொண்டு வெற்றிபெறுவதே பெருமைதரவல்லது. தேர்ந்த மாலுமிகள் பெரும் புயலுக்கும் சண்டமாருதத்துக்கும் அஞ்சுவதில்லை. அவற்றை வெற்றிகொண்டே புகழ் அடைகின்றனர்.

— எபிக்கூரஸ்.

அமரபாரதி - மார்ச் 83. நன்றி,

# செய்திகள்

## ஆயில்யத் திருநாள் ஆலய வழிபாடு

தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களின் ஜன்மநட்சத்திரமாகிய ஆயில்யத்திருநாள் ஆலயவழிபாடு 19—5—83 வியாழக்கிழமையன்று, பாண்டிநாட்டுத் தலமாகிய திருப்புனவாயில் அருள்மிகு பழம்பதிநாதர் திருக்கோயிலில் மிகச்சிறப்பாக நடைபெற்றது. சுவாமி அம்பாளுக்கு விசேஷ அபிஷேக ஆராதனைகள் நடைபெற்றன. தலத்திருப்பதிகப் பாராயணம் செய்யப்பெற்றது. வித்துவான். திரு. தா. குருசாமி தேசிகர் தலத் திருப்பதிகங்கள் பற்றி விரிவுரையாற்றினர். திருப்புனவாயில் திருப்பதிகங்கள் என்ற தலத் திருப்பதிக நூல் வெளியீடு வழிபாட்டிற் கலந்து கொண்ட அன்பர் கட்கு வழங்கப் பெற்றது. அன்பர் பலர் வழிபாட்டிற் கலந்து கொண்டு பயன் பெற்றனர்.

## குருவருளும் அருளுபதேசமும்

ஒவ்வொரு ஆங்கிலமாதத்திலும் முதல் ஞாயிற்றுக்கிழமை யன்றுகாலை சரியாகப்பத்துமணிக்கு ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களை அன்பர்கள் வணங்கி வழிபட்டு, அருளுபதேசம் பெறும் பிரார்த்தனை வழிபாட்டுக்கூடம் தருமையாதீனத் திரு மடத்தில் நடைபெற்று வருகிறது. இம்மாதம் 5—6—83 அன்று 26 ஆவது சிறப்பு வழிபாட்டுக் கூட்டம் நிகழ்வுற்றது.

கூட்டத்தின் தொடக்கத்தில் கூட்டுப்பிரார்த்தனை வழிபாடு நிகழ்ந்தது. அடுத்து திரு. மு. அருணசலம் அவர்கள், 'தேவாரங் களைப் பண் அமைதி குன்றுமலும் பொருளுணர்வுடனும் பாட வேண்டும் என்றும், காலை, மாலை, இரவு முதலிய காலங்களுக்கு உரித்தான பண் வழுவிப்பாடுவது சிறப்புடையது அன்று எனவும் விளக்கி, அதற்கான பயிற்சியைத் திருமுறைப் பண்ணிசைவாணர்கள் பெறவேண்டும் என்றும், தம்கருத்தினை எடுத்துரைத்தார்கள். தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் தம் உபதேச உரையில் திருத்தொண்டர் புராணச் சிந்தனையாக விறன்மிண்டர் புராணத்தை ஒட்டிச்

சைவசித்தாந்த சமய உண்மைகளை எடுத்து விளக்கியருளினார்கள். உண்மை, வாய்மை, மெய்ம்மை என்னும் சொற்பொருள் நயங்களையும் சச்சிதானந்த மயமான இறைவன் திருவருளையும் விளக்கித் திரிகரண சுத்தியுடன் வழிபாடு செய்யவேண்டும் என்னும் நெறியை உபதேசித்தார்கள். மிண்டு என்பது வலிமை குறிக்கும் சொல் என்பதை "மிண்டு மனத்தவர் போமின்கள்" என்னும் திருப்பல்லாண்டு மேற்கோள் கொண்டு விளக்கிய பாங்கு சிந்தனைக்கு நல்விருந்தாக அமைந்தது. விறன்மிண்டர் அடியாரைப் போற்ற வேண்டும் என்னும் சங்கம வழிபாட்டு நெறியைவலியுறுத்தியவர், என்று தெளிவித்துத் தத்துவக்கோட்பாடுகளைவிளக்கி உபதேசித்தார்கள். திருமயிலாடுதுறைப் பெருமக்களும் மெய்யன்பர்களும் கலந்துகொண்டு பயன்பெற்றனர்.

அடுத்து 27 ஆவது அருளுபதேசத் திருநாள் 3—7—83 அன்று நிகழ்வுற இருக்கின்றது. அன்பர்கள் கலந்து கொண்டு குருவழிபாடு ஆற்றியும் அருளுபதேசம் கொண்டும் பயனுறுவார்களாக.

## தருமையாதீனத்தில்

## ஸ்ரீ ஞானபுரீசுவரர் திருக்கோயில் பெருவிழா

தருமையாதீன முதற்குரவர் ஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள் ஜீவசமாதி எய்திய திருக்கோயிலாகிய ஸ்ரீ ஞானபுரிசுவரர் ஆலயத்தில் 23—5—83 அன்று தொடங்கிப் பெருவிழா நிகழ்வுற்றது. நாள்தோறும் பஞ்சமூர்த்திகள் திருவீதியுலாக்காட்சி நடைபெற்றது. திருவீதியுலாவின் போது ஆதீன வேதசிவாகம பாடசாலை, தேவாரபாடசாலை ஆசிரியர்களும், மாணவர்களும், ஆதீன தேவஸ்தான ஓதுவாமூர்த்திகளும் திருமுறைப்பாராயணமும், வேதபாராயணமும் நிகழ்த்தினார்கள். இன்புற்றனர்.

## குருபூஜை விழா

தருமையாதீனக் குருமுதல்வர் ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள் குருபூஜைப் பெருவிழா 1—6—83 புதன்கிழமையன்று மிகச் சிறப்பாக நடைபெற்றது. காலை தருமையாதீனம் 26 ஆவது ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் ஸ்ரீ ஆனந்தபரவசர் பூங்காவிலுள்ள குருமூர்த்தங்களை வழிபட்டு, ஆன்மார்த்தமூர்த்தி ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமானுக்கு விசேஷ அபிஷேக ஆராதனை செய்தார்கள். திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் 'கயிலைமாமுனிவர்' ஸ்ரீமத். காசிவாசி சுவாமிகள் வழிபாட்டிற் கலந்து கொண்டு அருட்பிரசாதம் பெற்று

தார்கள். நண்பகல் ஸ்ரீ ஞானபுரீசுவரர் திருக்கோயிலில் விசேஷ அபிஷேகங்களும், பஞ்சமுகார்ச்சனையும், நவசக்தி அர்ச்சனை ஆகியவையும் சிறப்பாக நடைபெற்றன. ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானத்தில் எழுந்தருளி இருந்து வழிபாடாற்றி வந்திருந்த அன்பர்கட்கு அருட்பிரசாதம் வழங்கினார்கள். குருபூஜை விழா மலராகச் 'சதமணிக்கோவையும் ஞானசாத்திரபஞ்சகமும்' என்ற நூல் வெளியிடப் பெற்றது. ஸ்ரீ ஞானபுரீசுவரர் திருக்கோயிலில் வழிபாடு நிறைவெய்தியபின் நண்பகல் மகேசுவரபூஜை நிகழ்வுற்றது.

## குருமூர்த்த தரிசனம் :

குருபூசைத் திருநாளாகிய 1—6—83 புதன்கிழமையன்று ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் மாலை 6 மணியளவில் நாதசுரஇன்னிசைமுழக்கத்துடன், அன்பர்களும் அடியார்களும் உடன் தொடரத் திருமஞ்சன வீதியில் அமைந்திருக்கும் குருமூர்த்தங்களைத் தரிசித்து வழிபாடாற்ற எழுந்தருளினார்கள். குருமூர்த்த வழிபாட்டின் போது ஒவ்வொரு குருமூர்த்தத்திலும் அவ்வவ் குருமணியின் அருள்வரலாறு சுருக்கமாக கூறப்பட்டது குருமூர்த்த வழிபாட்டிற்குப்பின் ஸ்ரீ தருமபுரீசுவரர், ஸ்ரீ அஷ்டா தசபுஜ லட்சுமி துர்க்காதேவி, ஸ்ரீ ஞானபுரீசுவரர் திருக்கோயில் களில் வழிபாடாற்றித் திருமடத்திற்கு எழுந்தருளினார்கள். ஸ்ரீசொக்கநாதப்பெருமானுக்கு குருபூசைத்திருநாளில் நிகழ்த்தப் பெறுகின்ற சிறப்பு வழிபாடுகள், திருமெய்ஞான நிவேதனத் துடன் அமைந்தன. வழிபாட்டிற்குப் பின் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்கள் திருக்கொலு வீற்றிருந்து அருட்காட்சி வழங்கினார்கள். கயிலைமாமுனிவர்கள் ஸ்ரீமத். காசிவாசிசுவாமி கள் வழிபாடு நிகழ்த்தினார்கள். ஆதீனத் திருக்கூட்டத்து அடியவர்களும், அறிஞர்பெருமக்களும், அன்பர்களும் தரிசித்து அருட்பிரசாதம் பெற்று மகிழ்ந்தனர்.

## பட்டினப்பிரவேசம் :

2—6—83 வியாழக்கிழமை பட்டினப்பிரவேசத் திருநாள். அன்று காலை ஸ்ரீ சொக்கநாதப் பெருமானுக்கு விசேஷ அபிஷேக ஆராதனைகள் நிகழ்வுற்றன. காலை 7 மணியளவில் ஸ்ரீ ஞானபுரீசுவரசுவாமி திருக்கோயிலில் சிவபூஜைதுரந்தரர் ஐம்பத்தொருவர் சிவபூசைபுரிந்த காட்சி மிகச் சிறப்பாக அமைந்திருந்தது. நண்பகல் மாகேசுவரபூசை நடைபெற்றது. இரவு தருமையாதீன இசைப்புலவர், சீகாழி. திரு. எஸ். கோவிந்தராசன் அவர்கள் புதல்வர் திரு. கோ. சிவசிதம்பரம்

குழுவினரின் இன்னிசை நிகழ்ச்சி நடைபெற்றது. பின்னர், ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் சிவிகையில் எழுந்தருளித் திருவுலாக் காட்சி தந்தருளினார்கள். 'கயிலைமாமுனிவர்' ஸ்ரீமத். காசிவாசி சுவாமிகளும் திருக்கூட்டத்து அடியவர்களும் தஞ்சை மாவட்ட ஆட்சித்தலைவர் திரு. ச. மெய்கண்டதேவன், மயிலாடுதுறைகோட்டாட்சியர் செல்வி எம். பி. நிர்மலா முதலிய அன்பர்களும், அறிஞர்களும் உடன் வரத் திருவுலாக் காட்சி சிறப்பாக நடைபெற்றது. திரு. ஏ. கே. சி. நடராஜன் குழலிசையும், ஆந்திரத்தம்பதிகள்ஷேக்முகபூப்சுபானி,காலிஷாபிசுபானி குழுவினர், திருவிடைமருதூர் பி. எஸ். வி. ராஜா குழுவினர் முதலிய புகழ்பெற்ற நாதசுர இன்னிசைக் குழுவினரின் இசையும், திருமுறைப் பண்ணிசையும் முழங்க திருவீதியுலாக் காட்சி நடைபெற்றது. தருமபுரம் திருவீதிகளில் அன்பர்கள் பூரணகும்பங்கள் வைத்து, ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களை வழிபட்டு அருட்பிரசாதம் பெற்றனர். திருவுலாக் காட்சி நிறைவெய்தியதும் திருக்கொலுக்காட்சி நடைபெற்றது. அன்பர்கட்கு ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் ஆசியருளி அருட்பிரசாதம் வழங்கியருளினார்கள்.

## திருநெறிய தெய்வத்தமிழ் மாநாடு

தருமையாதீனக் குருமுதல்வர் குருபூஜைப் பெருவிழாவை ஒட்டி 23—5—83 முதல் 2—6—83 முடியத் திருநெறிய தெய்வத் தமிழ் மன்றத்தில் நாள்தோறும் மாலை 7 மணியளவில் மாநாடு நிகழ்வுற்றது. நக்கீரர், அருணகிரிநாதர், குமரகுருபரர், மெய் கண்டார் திருநாவுக்கரசர், திருஞானசம்பந்தர், சுந்தரர், சேக்கிழார், காரைக்கால் அம்மையார், ஸ்ரீ குருஞானசம்பந்தர் திருநாள்களாகப் பத்து நாள்களும் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றன.

மாநாட்டின் முதல் நாளன்று தமிழ் மொழிக் காவலர் திரு. கி. இராமலிங்கனார், எம். ஏ. அவர்கள் தொடக்கி வைத்துச் சிறப்புரை ஆற்றினார். 27—5—83 அன்று காலை, மாலை இருவேளை நிகழ்ச்சிகளிலும், குன்றக்குடி, திருவண்ணாமலை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களும், 26—5—83 அன்று காஞ்சிபுரம், தொண்டைமண்டல ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்களும், 28—5—83 அன்றும் 1—6—83 அன்றும் திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் "கயிலைமாமுனிவர்" ஸ்ரீமத். காசிவாசி சுவாமிகள் அவர்களும் தலைமையேற்று உரை நிகழ்த்தினார்கள்.

மாநாட்டில் 23—5—83 முதல் 25—5—83 முடிய மூன்று நாட்கள் தமிழ்கடல் மணி திரு. இரா. இராதாகிருஷ்ணன்

எம். ஏ., அவர்கள் திருமுருகாற்றுப்படை பற்றித் தொடர் விரிவுரை ஆற்றினர். 29—5—83 முதல் 31—5—83 முடிய மூன்று நாட்கள் சொல்லின் செல்வர் திரு. சுகி. சிவம், பி. ஏ.,பி. எல்., ' அடியார்க்கும் அடியேன் ' ' பிள்ளைக்கறியமுது ' ' இப்படியும் ஒருதாயார் ' என்ற தலைப்புக்களில் தொடர் விரிவுரை ஆற்றினர். திருவாளர்கள் என். சேதுராமன், எஸ். வி. சிட்டிபாபு, என். ஆர் பட், என். ஆர். முருகவேள், தெ. ஞானசுந்தரம், தவத்திரு. ஊரன் அடிகள், க. வச்சிரவேல் முதலியார், நீதிபதி. மாண்புமிகு ஆர். செங்கோட்டுவேலன், அறநெறியண்ணல் கி. பழநியப்ப பிள்ளை, கு. சுந்தரமூர்த்தி, டி. வி. ஆர். சாரி, மு. சுவாமிநாதன், வை ஆறுமுகம்பிள்ளை, இரா. ராஜசேகரன், டி.என். அருணசலம் பிள்ளை, பழ. முத்தப்பன் மீ. ப. சோமசுந்தரம், குடவாயில். திரு. எம். பாலசுப்பிரமணியன், வி. மகாதேவன், எம். பாலசுப்பிர மணியன் மயிலாடுதுறை, கோட்டாட்சியர் செல்வி. எம். பி. நிர்மலா, டாக்டர் K. இராமலிங்கம், அ. மு. சுந்தரராஜன், ம. வே. ஜெயராமன், டாக்டர் திரு. கே. அரங்கசாமிப் பிள்ளை முதலிய அறிஞர் பெருமக்கள் வரவேற்புரை, தொடக்கவுரை தலைமையுரை, விரிவுரைகள் ஆற்றினர்.

திருநெறிய தெய்வத் தமிழ் மாநாட்டின் காலை நிகழ்ச்சியாகவும் சமயப் பயிற்சி வகுப்பின் சிறப்பு வகுப்பாகவும் 26, 27. 28—5—83 ஆகிய மூன்று நாட்கள் காலை 10 மணியளவில் ஆதீனத் திருமடத்தினுள் சிந்தனை அரங்கம் நிகழ்வுற்றது. இந் நிகழ்ச்சி இவ்வாண்டின் சிறப்பு நிகழ்ச்சியாகும், 26—5—83 அன்று ' வைதிக சமயங்களில் முத்திப்பேறு பற்றிய சிந்தனை- காஞ்சிபுரம் தொண்டைமண்டலாதீனம் ஸ்ரீலஸ்ரீமகாசந்நிதானம் அவர்கள் தலைமையில் சென்னைப்பல்கலைக் கழகத் தத்துவத் துறை இயக்குநர் திரு. ஆர். பாலசுப்பிரமணியன் முதன்மைச் சிந்தனையாளராக விளங்கினர். 27—5—83 அன்றுகாலை ' சென்று நாம் சிறுதெய்வம் சேர்வோம் அல்லோம், சிவபெருமான் திரு வடியே சேரப்பெற்றோம் ' என்பது சிந்தனைப் பொருள். குன்றக்குடி திருவண்ணமலை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் தலைமையில் தவத்திரு. ஊரன் அடிகள் முதன்மை யாளராகவும், சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி மாண்புமிகு. ஆர். செங்கோட்டுவேலன் பார்வையாளராகவும் பங்கேற்றனர். 28—5—83 அன்று ' தடங்கொண்டாதார் ' என்று தொடங்கும் தேவாரம் சிந்தனைப்பொருள். " குடங்கொண்டு அடியார் குளிர்நீர் சுமந்து ஆட்டப் பரமன் இடங்கொண்டிருந்தான் " என்ற பகுதி சிந்திக்கப்பெற்றது. திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் கயிலைமாமுனிவர் ஸ்ரீமத். காசிவாசி சுவாமிகள் தலைமையில்

திரு. ச. தண்டபாணி தேசிகர் முதன்மைச் சிந்தனையாளராக விளங்கச் சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி மாண்புமிகு. ஆர். செங்கோட்டுவேலன் பார்வையாளர் மதிப்புரை வழங்கினர். மூன்றுநாள் சிந்தனை அரங்கிலும் அவ்வத்துறையில் தலைசிறந்த அறிஞர்கள் இணைச்சிந்தனையாளர்களாக விளங்கினர். திருவாளர்கள், ந. ரா. முருகவேள், திரு. தி. ந. இராமச்சந்திரன், க. வச்சிரவேல் முதலியார், சி. அருணைவடிவேல் முதலியார், எஸ். கே. இராமராசன், என். ஆர். பட், டாக்டர். சொ. சிங்காரவேலன், டி. என். அருணாசலம் பிள்ளை, சிவஸ்ரீ. க. சுவாமிநாத சிவாசாரியார், சிவஸ்ரீ. எஸ். சுவாமிநாத சிவாசாரியார், என். சேதுராமன் ஆதி. முருகவேள் முதலிய அறிஞர்கள் இணைச் சிந்தனையாளர்களாக விளங்கித் தம் தம் சிந்தனைகளை விளக்கியுரைத்தனர். இம்மூன்று நாள் நிகழ்ச்சிகளும் அறிவுக்குப் பெருவிருந்தாய் அமைந்தன.

மாநாட்டின் கலை நிகழ்ச்சிகளாக 23—5—83 அன்று தருமபுரம் திரு. சி. சுப்பிரமணியன் குழுவினரின் 'குருஞான சம்பந்தர்' பற்றிய வில்லிசையும், 24—5—83 அன்று திருச்சேறை திருமங்கைதாசனின் குழுவினரின் விகட நிகழ்ச்சியும், 25—5—83 அன்று மயிலாடுதுறை செல்வன் எஸ். உமாமகேசுவரன் புவனேசுவரி குழுவினரின் இன்னிசையும், 27—5—83 அன்று பூம்புகார் செல்வி. ஆர். திருமகள் குழுவினரின் பரதநாட்டியமும், தருமபுரம் குருஞானசம்பந்தர் இலைஞர் நற்பணிமன்றத்தினரின் 'ஆதி குருஞானசம்பந்தர்' நாடகமும், 28—5—83 அன்று சென்னை குமாரி. ஹிமஜா பாலசுப்பிரமணியன் குழுவினரின் பரதநாட்டிய நிகழ்ச்சியும், 29—5—83 அன்று தஞ்சை குமாரி. கே. மைதிலி குழுவினரின் 'மீனாட்சியம்மை திருமணம்' பற்றிய இன்னிசை விரிவுரையும், 30—5—83 அன்று சிதம்பரம் செல்வன் D. சுவாமிநாதன், பாலசுப்பிரமணியன் குழுவினரின் தனிவயலின் இசையும், 31—5—83 அன்று சென்னை திருமதி. கௌரி குழுவினரின் 'அப்பூதி அடிகள்' பற்றிய இன்னிசை விரிவுரையும், 1—6—83 அன்று சீகாழி திரு. எஸ். திருஞானசம்பந்தம் திருச்சி எஸ். முத்துக்கந்தசாமி குழுவினரின் திருமுறை இசையரங்கமும், பட்டினப்பிரவேசத் திருநாளன்று தருமை யாதீன இசைப்புலவர் சீகாழி. திரு. எஸ். கோவிந்தராஜன் புதல்வர் திரு. கோ. சிவசிதம்பரம் குழுவினரின் இன்னிசை நிகழ்ச்சியும் மிகச் சிறப்பாக நடைபெற்றன. சமயப் பயிற்சியாளர்களும், மயிலாடுதுறை நகரப் பெருமக்களும், அன்பர்களும் விழா நிகழ்ச்சிகளில் கலந்துகொண்டு பயன்பெற்றனர்.

சமயப் பயிற்சி வகுப்பு

குருபூஜை விழாவை முன்னிட்டு 23—5—83 முதல் 2—6—83 வரை, பதினொரு நாட்கள் சமயப்பயிற்சி வகுப்புநடைபெற்றது. பயிற்சிவகுப்பினை சென்னை திரு. கீ. இராமலிங்கனார், எம். ஏ. அவர்கள் தொடங்கி வைத்தார்கள். தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் ஆசியுரை வழங்கினார்கள். பயிற்சிவகுப்பில் தமிழகத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்து வந்திருந்த நாற்பத்தெழுவர் பயிற்சி பெற்றுப் பயனடைந்தனர். சமயப்பயிற்சி யாளர்களுக்கு உணவு, உறையுள் முதலிய வசதிகள் ஆதீனத்தில் இலவசமாகச் செய்து கொடுக்கப் பெற்றன சிவஞானபோதத்தில், பதிஇயல்பு, பசுஇயல்பு, பாசஇயல்பு, வேதம், ஆகமம், அத்வைதம், திருமுறைகள், அவத்தைகள், சைவ – வைணவ ஒப்பீடு, தமிழ் அருச்சனை சங்கநூல்கள், ஆதீனவரலாறு, கம்பனில்தவம் தொண்டு, தியாகம், மேலை நாடுகளில் சைவ சித்தாந்தம், இருவினைஒப்பு மலபரிபாகம், சத்திநிபாதம், நால்நெறிகள், மாணிக்கவாசகர்காலம், அறுவகைச்சமயங்கள், உண்மைவிளக்கம், சைவ – வைணவ தத்துவம், நாதன்நடம், தசகாரியம், சைவக்கிரியைகள், சொக்கநாத வெண்பா, சிவபோகசாரம் பற்றிய வகுப்புகள் தக்க பேராசிரியர்களைக்கொண்டு நிகழ்த்துவிக்கப் பெற்றன. காலை 7 மணிக்குப் பயிற்சியின் அங்கமாகத் திருக்கோயில் வழிபாடு நிகழ்வுற்றது. 2—6—83 வியாழனன்று மாலை பயிற்சி வகுப்பு நிறைவுவிழாவின்போது சிதம்பரம், அறப்பணிச் செல்வர் டாக்டர். திரு. கே. அரங்கசாமிப்பிள்ளை அவர்கள் உரை நிகழ்த்திச் சமயப்பயிற்சி பெற்ற மாணவர்களுக்குச் சான்றிதழ் வழங்கினார்கள். சமயப்பயிற்சி நிறைவை ஒட்டித் திருச்சிராப்பள்ளி திரு. ஆதி. முருகவேள் எழுதிய 'சிவஞானபோதச் செம்பொருள்' என்ற நூல், தருமையாதீனம் ஞானசம்பந்தம் பதிப்பகத்தின் வாயிலாக வெளியிடப்பெற்று வழங்கப்பட்டது.

---

அருள் அறிவுக்கொண்டு சாத்திரங்களையும், பழம் புராணங்களையும் ஆராய்வோர் சேற்றில்மாட்டிக்கொள்ளமாட்டார்கள்; சஞ்சலத்தில் அகப்படமாட்டார்கள்; குப்பைக்குள் புகுந்து உடலும் மனமும் அழுக்காகி அல்லற்படமாட்டார்கள். தூதுகளை உணர்ந்து உண்மைவழி நடப்பார்கள். சாத்திரங்களைப்படித்துப் புரிந்துகொள்வதற்கு அருள் அறிவுவேண்டும். இதைப்பற்றி நமக்கு எச்சரிக்கிறார் திரு அருட்பிரகாசவள்ளலார்.

— சுவாமி நித்யானந்தா.

சத்யகங்கை – 15—3—83. நன்றி.

N. Ramamoorthy

19, Giri Street (Upstairs)
West Mambalam
Madras. 600033

1—6—1983

காவாய் கனகத்திரளே போற்றி !
கயிலை மலையானே போற்றி போற்றி !

அன்பும் அருளும் நிறைந்து விளங்கும் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களுக்கு அடியேன் இராமமூர்த்தி, குடும்பத்தினருடன் பணிவான நமஸ்காரங்களைத் தெரிவித்து எழுதுவது.

நாங்கள் அங்கு தங்கியிருந்த மூன்றுநாட்களில் எங்கள் வாழ்க்கையிலேயே இதுவரை கண்டிராத அற்புதக்காட்சிகளைக் கண்டு அளவிலா மகிழ்ச்சியிலும், ஆனந்த வெள்ளத்திலும், மனநிம்மதியிலும் மூழ்கி இருந்தோம். பூர்வ ஜன்ம புண்ணியத்தாலும், பாக்கியத்தினுலும் மகாசந்நிதானம் அவர்களின் அன்பு அருள் ஆசியாலுமே இவைகளை நாங்கள் காணும் அனுக்கிரகம் பெற்ருேம்.

அடைந்துபோன குருமகாசந்நிதானங்களின் குருமூர்த்தத் திருக்கோயில்களில் பூஜைகள் நடந்ததும், அதற்குத் தங்க நாற்காலிப்பல்லக்கில் வாண வேடிக்கைகள் நாதஸ்வரம் (இனிய முறையில்) பக்தகோடிகள்சூழ எழுந்தருளி, எல்லாவற்றையும் அற்புதவகையில் இயக்கியதும், மறுநாள் அஷ்டகஜபூஜையும் கோபூஜையும் கண்களைக் கவரும் வகையில் நடத்திவைத்ததும், அதற்குமுன் (குருஞானசம்பந்தர்) ஸ்ரீ ஞானபுரீசுவரருக்கு குடம்குடமாகப்பால்அபிஷேகம் நடத்திய காட்சியும் எங்கள் வாழ்க்கையிலேயே காணுத நிகழ்ச்சிகளாகும். கொலுக்காட்சி மிக அற்புதம். ஐம்பத்தொருபேர் சிவபூஜை செய்ததும், மற்றும் மாகேஸ்வரபூஜைகளும் மறக்கமுடியாது.

ஆயிரக்கணக்கான பக்தர்கள் இருந்தபோது எங்களையும் பொருட்படுத்தி "நாயேனையும் இங்கு ஒரு பொருளாக நயந்து வந்து நீயே நினைவின்றி ஆண்டுகொண்டாய்" என்றபடி எங்களுக்காக நேரம் ஒதுக்கி எங்களுடன் உரையாடி எங்களைப் பரவசப்படுத்தியது எங்கள் பெரும் பாக்கியம். நானும், செளகௌரியும், மற்றும் மாலினி ஆகியோரின் சார்பிலும் எங்கள் மனமார்ந்த அன்புகலந்த நன்றியையும் நமஸ்காரங்களையும் தெரிவிப்பதைத்தவிர வேறு எங்களால் என்னசெய்யமுடியும். இந்தத்தடவை செள.கௌரியின் கதாகாலக்ஷேபத்தை முழுதும் தாங்கள் செவிமடுத்ததற்கு மிக்க நன்றிகலந்த வணக்கம். *

N. இராமமூர்த்தி.





## ஜோதிஷம் திரு. A. இராசமாணிக்கம்

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நடுநிலைப்பள்ளி, திருப்பனந்தாள்.


### (ருத்ரோத்காரி௵ ஆனிமீ 1௳ முதல் 32௳ முடிய)

### (15—6—1983 முதல் 16—7—1983 முடிய)

| | | | |
|---|---|---|---|
| | | செ பு | சூ ரா |
| | இராசி | | சந் சுக் |
| | | | |
| கே | கு | சனி | ல/ |

| | | | |
|---|---|---|---|
| | கே | | ல/ கு பு |
| சந் | அம்ஸம் | | |
| | | | |
| | சு | ரா சூ சனி | செ |

ஸ்ரீ ருத்ரோத்காரி௵ ஆனிமீ 1௳ புதவாரம் ஆயில்ய நக்ஷத்திரம் பாலவ கரணம் கூடிய காலத்தில் சூரிய உதயம் முதல் 18 நாழிகை 48 வினாடிக்கு கன்னியாலக்கினத்தில் ஸ்ரீ லோகரட்சகரான சூரியபகவான் யோக சுபிட்சார்த்தத்தை முன்னிட்டு ரிஷபராசியிலிருந்து மிதுனராசி சங்கிரமணமாக ஆனிமாதப் பிரவேசம் செய்தருளுகின்றார். ஆனிமீ 8௳ புதவாரம் 19 நாழிகை 52 வினாடிக்கு ஸ்ரீ சூரியபகவான் திருவாதிரை நக்ஷத்திரத்தில் பிரவேசித்து மேகாதிபதியை ஏற்படுத்துகின்றார். அர்க்காதிபதி புத பகவான் மேகாதிபதியும் புதபகவானாகிறார். அதனாலும் சங்கிரமணகால கிரகஸ்திதியாலும் லோகில் எங்கும் நல்ல மழை ஏற்பட்டு காடு ஏரிகளில் நீர் நிரம்பும். உழவுத்தொழில் தீவிரமடையும். அகவிலை குறையும். ஜனங்கள் நாகரிக நவீனப் பொருள்கள் அனுபவித்துச் சந்தோஷமடைவர். ஈஸ்வரகிருபையில் பிரஜைகள் ஆக்கத்துறைகளில் உழைப்புள்ளவர்களாகி

மேன்மையுறுவர். தேசங்களில் நல்லோர்கள் சமூக சேவையாளர்கள் அரசாங்கத்தில் பதவி ஏற்று நாட்டுக்கு நல்லன செய்துவருவர். எல்லா பிரஜைகளும் ஜீவனோபாயம் நன்மார்க்கத்தில் பெற்று இனிது வாழ்வர்.

தேசங்களில் உள்ள திருமடங்கள் ஆசாரிய பீடங்களில் ஈஸ்வர கட்டளையில் லோகிற்கு சிவசமயம் போதிக்கும் பொருட்டு அவதரித்துவந்து திருவீற்றிருக்கின்ற சிவஞானகுரு மகான்கள் குருமகாசந்நிதானங்கள் லோகிற்கு நீதி இயம்பியும், லோகமாந்தர்கள் நேர்மையில் சிவநெறி கடைபிடித்துச் சிறக்கவும் அருளுபதேசம் செய்தும் ஆசியருள்வார்கள். தேசங்களில் எங்கும் தேவாலயங்களில் நித்தியம் ஆறுகால பூசைகள் நடைபெறும். ஈஸ்வரனுக்கிரகத்தினல் லோகமெங்கும் சுபிட்சம் ஏற்படும். பிரஜைகள் தெய்வ நம்பிக்கையில் கிரியைகளில் திடசித்தமாக மனம்வைத்துச் செயல்புரிந்து உயர்வடைவார்கள்.

## இராகு கேது பெயர்ச்சி

**குறிப்பு :-** ஸ்ரீ ருத்ரோத்காரி௵ ஆனிமீ 9௳ (23—6—83) குருவாரம் 37 நாழிகை 14 விநடிக்கு இரவு சுமார் 9 மணி அளவிற்கு மிருகசீர்ஷம் நக்ஷத்திரம் 2 ஆம் பாதத்தில் ரிஷபராசியில் ராகுபகவானும் கேட்டை நக்ஷத்திரம் 4 ஆம் பாதத்தில் விருச்சிகராசியில் கேதுபகவானும் மாறுதலாகி அவ்விராசிகளில் 1½ வருஷகாலம் சஞ்சாரம் செய்வார்கள். இராகு தனது உச்சராசியிலும் கேது குருவுடன் சம்பந்தப்பட்டும் இருப்பதால் லோகத்திற்கு நல்லன ஏற்படும்.

இராகு மிருகசீர்ஷ நக்ஷத்திரத்தில் சஞ்சரிக்கும் காலம் லோகில்வன்முறைகள்யுத்தங்கள்ஏற்படும். குருவீட்சணத்தினல் உடன் சமாதானம் ஏற்படும். இராகு உரோகிணி, கார்த்திகை நக்ஷத்திரங்களில் சஞ்சரிக்கும் காலம் விவசாயம் நீர்ப்பாசனம் இவை அதிகரித்து சுபிட்சம் காணும். அரசாங்கத்தில் பிரஜா நலத் திட்டங்கள் பல ஏற்பட்டு நாடுநலமுறும்.

கேதுபகவானும் கேட்டை அனுஷ நக்ஷத்திரங்களில் சஞ்சரிக்கும்காலம் தொழில்களில் நாடு முன்னேறும் உற்பத்திப் பொருள்கள் ஏற்றுமதியினல் நாடுகளில் பொருளாதாரம் மேலோங்கும். கேது விசாக நக்ஷத்திரத்தில் சஞ்சரிக்கும் காலம் பிரஜைகள் நல்ல மனப் போக்கில் தர்மம் உணர்ந்து நடப்பார்கள். லோகமாந்தர்களுக்கு ராசியினல் ஏற்படும் பலனவது கடகம். தனுசு, மீனம், மகரம், கன்னி, மிதுனம் இவ்விராசியுடையோருக்கு இராகு கேதுவால் மிகுந்த நல்ல பலன் தரும்.

மேஷம், துலாம், ரிஷபம், விருச்சிகம், சிம்மம், கும்பம் இவ்விராசியுடையோருக்கு குடும்பத்தில் கோள் சொல்பவர்களால் அல்லல், அதிகசெலவு, மனைவிக்குத்தோஷம், கால்நடைகளுக்கு க்ஷிணம் போன்ற அதமபலன் முன் ஆறுமாதங்களில் காட்டி நீக்கும். பின் ஒருவருஷம் குரு ஆட்சியிலும் சனி உச்சத்திலும் இருந்தும் ஒருசில ராசிகளுக்கு நற்பலஸ்தானத்திலும் விளங்குவதால் இல்லத்தில் சுபிட்சமும் பாக்கிய விருத்தியும் ஏற்படும்.

1. மேஷம் :- அசுவதி – பரணி. கார்த்திகை – ¼

( சு. சே. சோ. லா. - லி. லு. லே. லோ. – அ. )

மேஷராசி 9 பாதங்களும் சுபபலனைத்தரும். குடும்பாபி விருத்தியில் தனதிசௌகரியங்களில் நல்லஸ்திதியை ஏற்படுத்தி வரும். சிவப்பு பச்சைக்கற்கள் பதித்த ஆபரணம் தரும். வாகன சுகம் திருப்தியளிக்கும். ஜுன் 3வது வாரம் ஜுலை 2வது வாரம் வித்தியா வியாபாராதிகளில் கலைத்துறையில் விசேஷ நன்மைகளை ஏற்படுத்தும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்றாக இருந்துவரும். ஜுன் 18, 19, 20, 21, 27, 28, 29, 30 ஜுலை 1, 5, 6, 9, 10, 15, 16 தேதிகளில் தனதாயம், இஷ்டசித்தி, பிரபலம்தரும். ஜுலை 22, 23, 24 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன்தரும்.

2. ரிஷபம் :- கார்த்திகை ¾ – உரோகிணி – மிருகசீர்ஷம் ½

( இ ஊ. ஏ. – ஒ. வ. வி. வூ. – வே. வோ. )

ரிஷபராசி 9 பாதங்களும் மிச்சிரபலனாக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் தன வருமானம் 3 விதத்தில் கைக்குவரும். அதற்கேற்ப அவசியச் செலவும் மிகுந்து காணும். நல்ல ஆபரணம் தரும். ஜுன் 23வுக்கு மேல் அடிக்கடி வெளியில் அலைச்சல் ஏற்படும். எல்லா காரியங்களும் குறிப்பிட்டபடி வெற்றியாக நடந்துவரும். புத்திரர் பௌத்திரர்களின் நிலை நன்றாக இருந்துவரும். தாம்பத்திய வாழ்க்கை தெய்வபக்தியில் தானதருமங்களுடன் நடக்கும். ஜுன் 15, 20, 21, 22, 23, 24. 29, ஜுலை 1, 2, 3, 4, 7, 8, 11, 12, தேதிகளில் தனதாயாதி நற்பலன்களையளிக்கும். ஜுன் 25, 26 சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

3. மிதுனம் :- மிருகசீர்ஷம் ½ – திருவாதிரை – புனர்பூசம் ¾

( கா. கி. - கு. க. ஸ. ச்சா. – கே. கோ. ஹ. )

மிதுன ராசி 9 பாதங்களும் மிச்சிரபலனாக நடக்கும். குடும்பாபி விருத்தியில் பணவருமானம் மதிப்பாக வந்து கொண்டிருக்கும். வாகனம் பூமி இவற்றில் பொருள்முடங்கும்.

புதிய ஆபரணம் வாங்குதல் ஆகும். ஜுலை 8உ க்கு மேல் வித்துவத்துவத்தில் எழுத்து மூல ஒப்பந்தங்களில் நல்ல பொருள் கைக்குவரும். புத்திரர் பௌத்திரகளுக்கு உயர்வு தரும். தாம்பத்தியவாழ்க்கை சுமுகமாக நடந்துவரும். ஜுன் 16, 17, 22, 23, 24, 25, 26, ஜுலை 2, 3, 4, 5, 6, 9, 10, 13, 14, 15 தேதிகளில் தனுதாயாதி நற்பலன்களையளிக்கும். ஜுலை 27, 28, 29 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

4. கடகம்:- புனர்பூசம் ¼ - பூசம் - ஆயில்யம்.
(ஹி. - ஹு. ஹே. ஹோ. ட. - டி. டு. டே. டோ.)

கடக ராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் பணவருமானம் இலட்சுமி கடாக்ஷத்தில் வரவாகிக் கொண்டிருக்கும். ஆக்கத்துறையில் முதலீடு செய்ய நேரும். ஜுலை முதல் மந்த ஸ்திதியில் இருந்த எல்லா விஷயங்களிலும் தீவிரசெயல் ஏற்பட்டு பூர்த்தியடையும். நல்லவாகனம் தரும். புத்திரர் பௌத்திரர்களின் நலம் நன்ருக இருந்துவரும். தாம்பத்திய வாழ்வில் தெய்வபக்தி மிகுந்து தானதர்மத்துடன் நடந்துவரும். ஜுன் 15, 18, 19, 25, 26, 27, 28, 29 ஜுலை 5, 6, 7, 8, 11, 12, 15 தேதிகளில் தனுதாயாதி நற்பலன்களையளிக்கும். ஜுன் 30 ஜுலை 1 இத்தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன் தரும்.

5.- சிம்மம் :- மகம் - பூரம் - உத்திரம் ¼
(ம. மி. மு. மே. - மோ. ட. டி. டு. - டே.)

சிம்ம ராசி 9 பாதங்களும் சுபபலனுக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் நல்ல பணவருமானங்கள் வந்து நிறையும். ஸ்திரி புத்திரி இவர்கள் நலனில் குலசம்பிரதாயங்களில் சுப செலவினை ஏற்படுத்தும். சகோதரருக்கு நல்லன ஏற்படும். வீடு வாகனங்களில் நல்லசௌகரியம் தரும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். ஜுன் 16, 17, 20, 21, 27, 28, 29, 30 ஜுலை 1, 7, 8, 9, 10, 13, 14, 15, தேதிகளில் தனுதாயம் தைரியசெயல், மிகுந்தநன்மை, சந்துஷ்டி ஏற்படும். ஜுலை 2, 3, 4 தேதிகள் சந்திராஷ்டமம். மற்றதேதிகளில் மத்திமபலன் தரும்.

6. கன்னி :- உத்திரம் ¾ - ஹஸ்தம் - சித்திரை ½
(டோ. ப. பி. - பு. ஷ. ண. ட. - பே. போ.)

கன்னியா ராசி 9 பாதங்களும் சுபமான பலனைத் தரும். குடும்பாபி விருத்தியில் நல்ல தனவருமானம் வந்துகொண்டிருக்கும். வித்தியா வியாபாராதி கலைத்துறைகளில் விசேஷ நன்மைகளை உண்டுபண்ணும். ஜுன் 22 தேதியானுல் உத்தியோகத்தில் உயர்பதவிதரும். பூமி இயந்திரங்களில் நல்லன ஏற்படும்.

தாரபுத்திரர்களின் சௌக்கியம், நன்றாக இருந்துவரும். ஜுன் 15, 18, 19, 22, 23, 24, 30 ஜுலை 1, 2, 3, 4, 9, 10, 11, 12, 15, 16 தேதிகளில் தனதாயம் நல்ல சௌகரியம், ஜீவன மேன்மை அளிக்கும். ஜுலை 2, 5, 6 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

7. துலாம்:- சித்திரை ½ - சுவாதி - விசாகம் ¾

(ர. ரி. - ரு. ரே. ரோ. தா. - தி. து. தே.)

துலா ராசி 9 பாதங்களும் மிச்சிர பலனாக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் நல்ல விதத்தில் பணவருமானம் வரும். வித்யா வியாபாராதிகளில் கலைத்துறையில் நல்லமுன்னேற்றம் ஏற்படும். உத்தியோகத்தில் மாதம் பின் பகுதியில் பதவிஉயர்வு தரும். புதிய வாகனம் வாங்குதல் ஆகும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்றாக இருந்து வரும். ஜுன் 15, 16, 17, 20, 21, 22, 25, 26 ஜுலை 2, 3, 4, 5, 6, 11, 12, 13, 14 தேதிகளில் தனதயாதி நற்பலன்களையளிக்கும். ஜுலை 7, 8 தேதிகளில் மத்திம பலன் தரும்.

8. விருச்சிகம் :- விசாகம் ¼ - அனுஷம் - கேட்டை.

(தோ. - ந. நி. நு. நே. - நோ. ய. யி. யு.)

விருச்சிக ராசி 9 பாதங்களும் மிச்சிரபலனாக நடக்கும் பூமியில் இயந்திரங்களில் அதிகபொருள் முடங்கும். சிலசமயங்களில் பிரம்மையும் வெப்பாதிக்க நலிவும் ஏற்படும். ஸ்ரீ துர்க்கா பரமேசுவரிக்கு அருச்சனை செய்ய மனத்தெளிவு உடல் நலம் தரும். வீடுவாகனங்களில் நல்ல சௌகரியம் இருந்துவரும். உத்தியோக உயர்வு தரும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்றாக இருந்துவரும். ஜுன் 16, 17, 18, 19, 22, 23, 24, 27, 28, 29 ஜுலை 5, 6, 7, 8, 13, 14, 15, 16 தேதிகளில் தனதாயாதி நற்பலன்களையளிக்கும். ஜுலை 9, 10, தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

9. தனுசு :- மூலம் - பூராடம் - உத்திராடம் ¼

(யே, யோ. பா. பி. - பு. த. ப. ட. - பே.)

தனூர்ராசி 9 பாதங்களும் மிச்சிர பலனாக நடக்கும். தன வருமானம் கணிசமாகவரும். பூமியில் இயந்திர சாதனங்களில் அபிவிருத்திபலன் உண்டாகும். ஜீவனோபாய உத்தியோகங்களில் ஜுலை 7 தேதிக்கு நல்ல மாற்றம் உண்டாகும், வீடு வாகனங்களில் நல்ல சௌக்கியம் இருந்துவரும். மனைவிக்கு நீர் எரிச்சல் போன்ற நலிவு ஏற்படினும் உடன் குணமாகும். புத்திரர் புத்திரிகளுக்கு சுபம் ஏற்படும். ஜுன் 18, 19, 20, 21, 25. 26, 30 ஜுலை 1, 7, 8, 9, 10, 15, 16 தேதிகளில் தனதாயாதி

நற்பலன்களை அளிக்கும். ஜூலை 11, 12 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திமபலன்தரும்.

10. மகரம் :- உத்திராடம் $\frac{3}{4}$ - திருவோணம் - அவிட்டம் $\frac{1}{2}$
( போ. ஜ. ஜி. - கி. கு. கே. கோ. - கா. கி. )

மகரராசி 9 பாதங்களும் சுபமானபலனைத்தரும். குடும்ப அபிவிருத்தியில் நல்ல பணவருமானம் வரும். சகோதரருக்கு உயர்வு ஏற்படும். வீடு வாகனங்களில் ஜூலை முதல் நல்லன ஏற்படும். வித்தியாவியாபாராதிகளில் கலைத்துறையில் ஜூன் 22 தேதி முதலே விசேஷ நன்மைகளை ஏற்படுத்தி வரும். அரசாங்க நன்மை ஏற்படும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். ஜூன் 15, 20, 21, 22, 23, 24, 27, 28, 29, ஜூலை 2, 3, 4, 9, 10, 11, 12 தேதிகளில் தனுதாயாதி நற்பலன்களையளிக்கும். ஜூன் 16, 17 ஜூலை 13, 14 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

11. கும்பம் :- அவிட்டம் $\frac{1}{2}$ - சதயம் - பூரட்டாதி $\frac{3}{4}$
( கு. கே, - கோ. ஸ. ஸி. ஸு. - ஸே. ஸோ. தா. )

கும்ப ராசி 9 பாதங்களும் மிச்சிரப்பலனுக நடக்கும். குடும்பாபி விருத்தியில் ஜூன் 24வ முதல் பணவருமானம் கணிசமாக கைக்கு வருவதாகும். உடன் அவ்வழியிலேயே அதிகமுதலீடு செய்யும். பெற்ருேர் சமானுேர் வியோக சம்பவம் ஆகும். ஞாயிற்றுக்கிழமை சூரியார்ச்சனை செய்ய அலைச்சல் ஆயாசம் நீங்கும். ஜூலை 5 தேதிக்கு எழுத்து மூலத்தில் ஓர் நன்மை ஏற்படும். தாரபுத்திரர்களின் சௌக்கியம். நன்ருக இருந்து வரும். ஜூன் 15, 16, 17, 22, 23, 24, 25, 26, 30 ஜூலை 1, 5, 6, 11, 12, 13, 14 தேதிகளில் தனுதாயம் ஒப்பந்தம் காரிய அனுகூலம் ஆகும். ஜூன் 18, 19 ஜூலை 15, 16, தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில் மத்திம பலன் தரும்.

12. மீனம்:- பூரட்டாதி $\frac{1}{4}$ - உத்திரட்டாதி - ரேவதி.
( தி. - து. ஸ. ச. த. - தே. தோ. ச. சி. )

மீன ராசி 9 பாதங்களும் மிச்சிர பலனுக நடக்கும். குடும்ப அபிவிருத்தியில் நல்ல பணவருமானம் வந்துகொண்டிருக்கும். காரியங்களில் இழுபறியும், அல்லலும் இருப்பினும் கணிசம் நிரம்பியதாக இருக்கும். சகோதரர் பந்துக்கள் ஒன்று கூடுவர். தாரபுத்திரர்களின் நலம் நன்ருக இருந்துவரும். ஜூன் 16, 17, 18, 19, 25, 26, 27, 28, 29 ஜூலை 2, 3, 4, 7, 8, 13, 14, 15, 16 தேதிகளில் தனுதாயம் உறுதிபான்மை காரிய ஜெயம் ஏற்படும். ஜூன் 20, 21 தேதிகள் சந்திராஷ்டமம். மற்ற தேதிகளில்மத்திம பலன் தரும்.